*Muracoli*

*Muracu 4, oli 2*

*May 03, 1957*

Record no. 945

# முரசொலி

வார இதழ் — ஆசிரியர்: மு. கருணாநிதி

முரசு 4 || 3—5—57 வெள்ளி | ஒலி 2


## சட்டசபையில் உதய சூரியன்!

கோடையின் வெப்பம் தகிக்கும் 'கோட்டை'க்குள்ளே குற்ருலம் அருவி!

'பாடை கட்டுவோம் நீவிர் கடையை மூடாவிடில்' என்று மேடையமைத்து முழக்கியவர் முன்னிலையில் முரசின் ஒலி! யாழின் கீதம்! குழலின் இசை! இவையனைத்தையும் வென்றிடும் 'மழலையையும் பின்னிடச் செய்யும் மாமன்னரின் தேனருவிச் சொற்பொழிவு!

குழந்தைகள் கட்சி என்ருர்கள்; அதன் தலைவனே அன்று 'அனுபவக் கிழவர்கள்' என்று நினைத்துக் கொண்டிருப்போர் அனைவரும் அயர்ந்திடும் வகையிலே அமுத மழை பொழிந்தார்!

'உம்; அடுக்குச் சொல் பேசத்தானே தெரியும்'—என்ருர்கள்; அன்ருே அழகு தரும் அடுக்குச் சொற்களோ கைகளிலே விரல்களிருப்பதைப்போல்; முகத்திலே இரு கண்களிருப்பதைப் போல்; உதடுகளுக்கிடையிலே பற்களிருப்பதைப் போல்—இயற்கையானதாக; தேவையானதாக; மிகைப்படுத்தப் படாமல் மிதமாய் இருப்போரும்; மிடுக்கு மொழி பகர்வோரும் வெட்கித் தலைகுனியும் விதத்திலே வந்து விழுந்தன!

'பார்த்து விடுகிருேம் ஒரு கை' என்ருர்கள்; பாவம், பிறர் பாதம் தாக்குவதைத் தவிர வேறென்று மறியாத அவர்கள் தமிழ் தாக்கி வளர்க்கும் அந்தச் செந்நாப் புலவனின் செந்தேன் பேச்சு கேட்டு—செருக் கழியப் பெற்றனர்!

"அண்ணுதுரை சட்டசபை செல்லுவார்; அவர் கலகக்காரர்; ஆகையால் அதிக நேரம் பேசுவார்; சபாநாயகர் தடுப்பார்; உடனே முன்னேற்பாட்டுடன் முன்பே பார்வையாளர்களாய் வந்திருக்கும் கண்ணீர்த் துளிகள் சம்பந்தமில்லாமல் கூக்குரல் போடுவார்கள்; சட்டசபையிலே குழப்பம் குடியேறும்; கௌரவம் கலையும்,"

—என்று பேனுவைச் சாக்கடையிலும்; பேரறிவை மடமையிலும் தோய்த்து எழுதி வரும் ஏடொன்று எழுதிக் காட்டிற்று!

—அவர்களது அறியாமையை; அற்பத்தனத்தை நாடு இன்று பார்த்து கைகொட்டிச் சிரிக்கிறது; கழகத்தின் கடமையுணர்ச்சியை மெச்சிப் புகழ்கிறது!

நாடு இன்று முதன் மந்திரியின் பேச்சினைக் கேட்டிடத் துடிதுடிப்புடன் காத்திருக்கவில்லை; நாட்டு மக்கள் எதிர்க்கட்சித் தலைவர் என்ன சொல்கிருர்—என்பதை அறிய ஆவல் மீறி நிற்கிருர்கள்!

வெல்லும் சொல் பிறிதோர் சொல் இல்லையென வெல்லச் சொல் உதிர்க்கும் அந்த அடலேறு — அறிஞர் பெருந்தகை — எழுச்சியுற்ற தமிழகத்தின் இருள் அகற்ற வந்த உதய சூரியன் — சட்டசபையில் உறுதி மொழி எடுத்த காட்சிதான் இந்த வார 'முரசொலி'யின் முகப்பை அலங்கரிக்கிறது!





# கனவில் நடந்தது

பி. சி. கணேசன், பி. எஸ்ஸி., பி. டி.

[பிரபல சங்கீத நிபுணரும் தத்துவ ஞானியுமான ஆல்பர்ட் ஸ்வைட்ஸர் கட்டிலில் படுத்துக் கண்ணயர்ந்து தூங்குகிறார்......யாரோ வரும் காலடி ஓசை கேட்டுக் கண் விழித்துக் கொள்கிறார்.]

வந்தவர்:—என்ன ஸ்வைட்ஸர், உடம்பெல்லாம் எப்படி இருக்கிறது?

ஸ்வை:— யார்? ஐன்ஸ்டைனா? ஏது இப்படி...மாண்ட பின்னும் மனித இனத்தின் நல்வாழ்வில் உள்ள அக்கறை குறையவில்லை போலிருக்கிறதே!

ஐன்ஸ்:—என்னசெய்வது? ஏவலாளியாக இருக்க வேண்டிய விஞ்ஞானத்தை மனிதன் எஜமானனுக்கி விட்டான். அதனால் வந்த கோளாறுதான் இதெல்லாம்! ...அது கிடக்கட்டும்; நல்ல நேரத்தில் அணுகுண்டுப் பரிசோதனைகளையும், அதனால் விளையும் கேடுகளையும் கண்டித்து அறிக்கை விட்டீர்கள்...

ஸ்வை:—நான் மட்டுமா? மனித நாகரிகம் அழியாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்று எண்ணுகின்ற அனைவரும், ரஸ்ஸல், நேரு, ராஜாஜி—போன்ற பெரியோர்களெல்லாம் கண்டித்திருக்கிறார்கள்......ஹூம்..... கண்டித்துப் பலன்...

ஐன்ஸ்:— ஏன்...?

ஸ்வை:—ஏன்? அறிவாளிகள் கண்டிக்கிறார்கள்......ஆனால் இந்த அரசியல் வாதிகள்—மாக்மில்லன், ஐஸன்ஹோவர், புல்கானின் — போன்ற அரசியல் தலைவர்களுக்குக் கௌரவமும் பிடிவாதமும் தான் பெரிதாகப்படுகிறதே தவிர, மனித இனத்தின் நலனைத் துச்சமாகவல்லவா மதிக்கிறார்கள்...

ஐன்ஸ்:—அப்படிச் சொல்லி விடாதீர்கள்...இந்த அரசியல் வாதிகளையும் ஆட்டிப் படைக்கும் சூத்திரக் கயிறு விஞ்ஞானிகளிடம்தான் இருக்கிறது...பார்த்தீர்களா, பதினெட்டு ஜெர்மன் அணு விஞ்ஞானிகள் அணுவை அழிவு விஷயத்தில் பயன்படுத்தும் முயற்சியில் அரசியல்வாதிகளோடு ஒத்துழைக்கப்போவதில்லை என்று அறிக்கைவிட்டு விட்டார்கள்......

ஸ்வை:—இம்மாதிரி நல்லவர்களால்தான் நானிலம் வாழுகிறது...இருந்தாலும் பாருங்கள், ஐன்ஸ்டைன்; இந்த அணுசகாப்தமே வந்திருக்க வேண்டாமென்று தோன்றுகிறது...

ஐன்ஸ்:—அய்யய்யோ! என் விஷயத்திலேயே கையை வைத்துவிட்டீர்களே! பொருளும் சக்தியும் ஒரே விஷயத்தின் இரண்டு நிலைகள் என்ற உண்மையை நான் கண்டுபிடித்து, அந்த உண்மை நிரூபணமானபோது, மனித இனம் என்னுடைய ஆராய்ச்சியால் பெற இருக்கின்ற நன்மையைப்பற்றி எவ்வளவு பெருமைப்பட்டேன் தெரியுமா? மனிதனைப் பிடித்த பொல்லாத காலம், அணுவைப் பிளந்து அணு சக்தியை வெளிப்படுத்திய போது யுத்தம்நடந்துகொண்டிருந்தது—ஆகவே அணுவின் ஆற்றல் அழிவு வேலைக்குப் பயன்பட்டது. சமாதான காலமாயிருந்தால் அந்த ஆற்றல் ஆக்கவேலைகளுக்குப் பயன்பட்டிருக்கும். நீர் வீழ்ச்சியில்லாதமின்சாரம், நெருப்பில்லாதஅடுப்பு, நிலக்கரி-பெட்ரோல்—இல்லாத இயந்திர விசை, இப்படி எத்தனையோ நன்மைகள் கிட்டியிருக்கும்...

ஸ்வை:— ஒன்று மட்டிலும் உண்மை; அறிவை வளர்த்துக்கொண்ட மனிதன், அறவுணர்ச்சியை வளர்த்துக் கொள்ளத் தவறி விட்டான். விளைவு—மனித இனம் சர்வ நாசத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது.

['ஆமாம்' என்று ஒரு கூச்சல் கேட்கிறது. புதிய உருவம் ஒன்று உள்ளே நுழைகிறது. ஸ்வைட்சரும் ஐன்ஸ்டைனும் வந்த உருவம் யார் என்று புரியாமல் விழிக்கிறார்கள்.]

புது உருவம்:—என்ன மிஸ்டர் ஐன்ஸ்டைன், என்ன மிஸ்டர் ஸ்வைட்சர், நீங்கள்—இருவரும் என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆனால்பார்த்திருக்கமாட்டீர்கள். நான்தான் டால்டன்!

ஐன்ஸ்:—அணு தத்துவம் கண்ட டால்டனா?

டால்டன்:—'பிரிக்க முடியாத—உடைக்க முடியாத மிகச் சிறிய பொருள்தான் அணு' என்று இலக்கணம் வகுத்துச் சொன்ன டால்டன் நானேதான் மிஸ்டர் ஐன்ஸ்டைன், அணுவை உடைக்க முடியாது என்ற நம்பிக்கையில் உடைக்காதே அணுவை என்று நான் கட்டளையிட்டேன். ஆனால் நீங்கள்தானே அணுவை உடைக்க முடியும் என்ற உண்மையை வெளியிட்டு, மக்களை இவ்வளவு அவதிக்கு ஆளாக்கியிருக்கிறீர்கள்!

ஸ்வை:—டால்டன், நீங்கள் ஐன்ஸ்டைனைக் குற்றம் சாட்டுவது தவறு. அணுவின் ஆற்றலைக் கண்டதோ, அதை வெளிப்படுத்தியதோ தவறில்லை. ஐன்ஸ்டைனை விட சமாதானப் பிரியர்கள் யார் இருந்திருக்கிறார்கள்? ஆனால் அந்த அணு சக்தியை அழிவு வேலையில் ஈடுபடுத்தினார்களே...

['ஆமாம்! அது மகாப் பெரிய பாதகம் — மன்னிக்க முடியாத கொடுமை' என்று கூறிக் கொண்டே நடுத்தர வயதுடைய ஒருவர் உள்ளே நுழைகிறார்.]

ஐன்ஸ்:—வாருங்கள், மிஸ்டர் ஓப்பன் ஹீமர்!

ஓப்பன்:—டால்டன், நீங்களோ ஐன்ஸ்டைனோ குற்றவாளிகளல்ல! அணுசக்தியைப் பயன்படுத்தி முதல் அணுகுண்டைத் தயாரித்து, ஜப்பான் மக்கள்மீது போடக் காரணமாயிருந்த கொடுமையாளன் நான்! நான் மட்டுமென்ன? அரசியல்வாதிகளின் ஆட்டிப் படைக்கும் பாவையாக இருந்தேன். அணுகுண்டின் கோர விளைவுகளை எண்ணி யெண்ணி இன்று வரையில் கண்ணீர் வடித்த படியேதான் இருக்கிறேன். இன்று என் நிலை என்ன? அமெரிக்க அரசாங்கமே—எந்த அரசாங்கம் ஜப்பானைத் தோற்கடிக்க அன்று என் உதவியை நாடியதோ—அதே அரசாங்கமே என்னைக் காவல் கைதியாக்கி வைத்திருக்கிறது. ஆம், ரஸ்ஸல் சொன்னபடி, தொழிற்கட்சித் தலைவர் பெவான் சொல்லுகிறபடி, அரசியல்வாதிகள் நீங்கிய விஞ்ஞானிகளும் தத்துவ ஞானிகளும் ஒன்று கூடி உலக நாகரிகத்தைக் காப்பாற்றத் திட்டம் தீட்ட வேண்டும்....

['அப்படியே செய்யுங்கள்,' என்று கூச்சலிட்டபடி, ஜப்பான் பிரதமரின் தூதுவர் உள்ளே நுழைகிறார். நால்வரும் அவரை அனுதாபத்தோடு பார்க்கின்றனர்.]

தூதுவர்:—ஐயா, எங்கள் கடலில் கதிரியக்கம், காய்கறிகளில் கதிரியக்கம், மீன் உடல்களில் கதிரியக்கம்... விளைவு, விதவிதமான புற்று நோய்கள்...தவிர, கதிரியக்கத்தின் விளைவாகப் பின் சந்ததியில் உதிக்கின்ற குழந்தைகள்கூட கூன், குருடு, செவிடு, மூடமாகி, ஆயுளும் குறைபட்டுப் போகுமாம்... உன்ன அநீதி ஐயா! கேட்க நாதியில்லையா?

ஸ்வைட்சர்:—பயப்படாதீர்கள்! உலகில் நல்லவர்கள் அருகிவிடவில்லை. முதலில் அழிவு வேலையில் ஒத்துழைக்க மறுக்கும் ஜெர்மன் விஞ்ஞானிகளைப் பாராட்டி ஒரு அறிக்கை விடுவோம். உலகெங்கும் உள்ள மக்களைக் கண்டனக் குரல் எழுப்பச் செய்வோம்.

எல்லோரும்:—வாழ்க சமாதானம்! வளர்க மனித ஒற்றுமை!

[ஜப்பானியத் தூதுவர் நன்றியுணர்ச்சியோடு பார்க்கிறார்.]

என் முதல் கனவு கலைந்தது!



---

"60—40 என்ற சட்டம் இன்றைய தினம், உயர் நீதி மன்றத்தின் படிக்கட்டுகளில் ஏறி இறங்கிக்கொண்டிருக்கிறது. 'விவசாயிக்கு 60—நிலச் சொந்தக்காரருக்கு 40' என்கிறார்கள்; அந்த நிலச் சொந்தக்காரர் யார் என்பதற்கு விளக்கம் தரவில்லை அந்தச் சட்டத்தில்!

"திருச்சியைச் சேர்ந்த ஒரு மிராசுதாரர் உழவர் பெருமக்களை 'உங்களை விவசாயிகள் என்று ஒத்துக்கொள்ள முடியாது; நீங்கள் கூலிகள்தான்' என்று கூறியிருக்கிறார். 'எப்படி ஐயா, நாங்கள் கூலிகள்? நாங்கள்தானே விவசாயம் செய்தோம்?' என்று கேட்கிறார்கள்—3,000 குடும்பத்தார், குளித்தலைத் தொகுதியில்! 'நீங்கள் செய்வதுவிவசாயம்தான்; ஆனால், சட்டத்தில், மாடு—எரு வாங்கி யார் போராடுகிறார்களோ அவர்கள்தான் விவசாயிகள் என்று உள்ளது; ஆகவே, நீங்கள் கூலிதான்; எனவே, உங்களுக்கு 60—40 தர முடியாது' என்று சொல்லிவிட்டதால்தான் இப்பொழுது இதே நேரத்தில், குளித்தலையில் உள்ள களத்துமேட்டில் அறுவடை செய்யப்பட்ட நெற் கதிர்கள் போர் போராக அடுக்கப்பட்டுள்ள நிலையிலேயே இருக்கிறது.

"இப்படி ஓட்டை உடைசல் நிறைந்த சட்டங்களைப் போடுகின்ற நேரத்தில், எதிர்க்கட்சியிடத்தில் அவர்கள் ஆலோசனை கேட்க வேண்டும்: அப்படி ஆலோசனை கூறத்தான் எதிர்கட்சியை மக்கள் அனுப்பியிருக்கிறார்கள்.

—அறிஞர் அண்ணா

---









வெள்ளி 3—5—57 சென்னை

# திராவிடப் பாட்டாளி மக்களே, ஒன்று சேருங்கள்!

மே தினம்—உதவாதினி ஒரு தாமதம் என்று விழித்தெழுந்து: நெற்றியில் வடியும் வியர்வை நீரினை வழித்தெறிந்து, குள்ள நரிச் செயல் புரியும் முதலாளித்துவ மத யானைக்கு அங்குசம் தயாரித்ததைக் குறிக்கும் உலகப் பெருவிழா! தொழிலாளர் திருவிழா!

இருபத்தி நான்கு மணி நேரத்தில் பதினெட்டு மணி நேரமும்; இருபது மணி நேரமும் மெழுகாய் உருகி; புழுவாய்த் துடித்து; கால் வயிறு 'கழுவி வந்த கதியற்றவன்' மனிதருள் நானும் ஒருவன்; மண்ணன்று-என்னும் மகோன்னதத் தத்துவத்திற்காகப் போராடி; சிலரைத் தூக்கு மேடைக்கும், துப்பாக்கி ரவைகளுக்கும் பலி கொடுத்து; நலிவு தீரப் பெற்றதன் முகத்திலே பொலிவு திகழும் பொன்னாள்—இன்னாள்!

'உலகப் பாட்டாளி மக்களே, ஒன்று சேருங்கள்!'—இந்த முழக்கத்தை இடியோசை போல முழக்கிக் காட்டுகிறது, மார்க்ஸ் சொல்லிக் கொடுத்து; மாவீரர் லெனினும், ஸ்டாலினும் இசைத்துக் காட்டிடும் வேதப் புத்தகம்!

அதே நேரத்திலேதான் இந்திய உப கண்டத்திலே நம்மைச் சுரண்டி; தோப்பை விழப்பெற்ற வடநாட்டு யானைகளின் காலடியிலே சிக்கித் தவித்திடும் நாம் கூக்குரல் கொடுக்கிறோம் 'திராவிடப் பாட்டாளி மக்களே; ஒன்று சேருங்கள்!'—என்று!

'குறுகிய மனப்பான்மை; குள்ளநரிக் குணம்'-தாவி வருகின்றன கண்டனக் கணைகள் ஒரு புறத்திலிருந்து!

'இனவெறி கொண்டவர்கள்; துவேஷ மனப்பான்மை உடையவர்கள்'—புழுதி வாரி வீசுகிறார்கள் ஒரு சாரார்!

'தொழிலாளர் சக்தியைப் பிளவு படுத்தப் பார்க்கிறார்கள்; செவி சாய்க்காதீர், இவர்கள் பேச்சுக்கு'—பொறுமை யுணர்ச்சியால் தாக்குண்டவர்கள் நம்மைத் தாக்குகிறார்கள், இப்படி!

—இருந்தாலும்; இந்தப் பயலுக்கும் புகைச்சலுக்கும் கலங்காமல் வருங்கால விடுதலைத் திராவிடத்தைக் கலங்கரை விளக்கமாகக் கொண்டு, எல்லாத் தொழிலாளர்கள் முனையிலும் அவர்கள் தோளோடு தோள் நின்று; பாசறை அமைத்துப் போரிட்டு வருகிறது, தி. மு. கழகம்!

மற்றவர்களைப்போல் நாம் தற்காலிகக் கூலி உயர்வினை மட்டும் குறிக்கோளாக வைத்து ஏது மறியாதத் தொழிலாளர் சக்தியை ஆட்டு மந்தைகளாக நினைத்து; அவர்களை நம் நாட்டுக்கு அப்பாலிருக்கும் சக்திகள்பால் அடகு வைப்பதில்லை!

பாட்டாளிகளின் கூட்டுறவைப் பாணமாக உபயோகித்துத் தனிப்பட்ட பண முதலைகளின் கைலாகுதனையும், திரை மறைவு உறவுதனையும் பெற்றதில்லை; பெறவும் நினைத்ததில்லை!

ஒரு மோதிரத்துக்குள் நுழைந்து செல்லும் விதத்திலே, சிலந்தி வலையை விட; பாம்புச் சட்டையை விட—மெல்லிய-மிக, மெல்லிய ஆடைகளை அகிலத்தின் சந்தைகளுக்கெல்லாம் அனுப்பிய அகில்—தேக்கு—மயில்—மிளகின் சொந்தக்காரன் இன்று ஒண்ணினும் ஒட்டிய வயிறு கொண்டவனாய்; உடல் இளைத்தவனாய்; ஒதியமிலாரினும் உபயோகமற்றவனாய் மாறியது ஏன்?—என்று கேட்டு திராவிடத்தின் தொழிலாளத் தோழர்களின் பாட்டன்மார்கள் வாழ்ந்த பெருவாழ்வினைச் சுட்டிக்காட்டி; இன்று வடநாட்டவர் ஆட்சியால் அவன் அனுபவித்து வரும் பெரு நோய் பிடித்த வாழ்க்கையின் இழிதகை நிலைமையையும் எடுத்தியம்பி—வருங்கால வரலாற்றினைத் திருத்தியமைப்பதற்குத்தான் அணுப் பொழுதையும் வீணாக்காமல் உழைத்து வருகிறது; உழைப்பாளர் போராட்டத்தை நடத்தி வருகிறது தி. மு. கழகம்!

அதை விளக்குவதற்காகத்தான் தென்னாட்டிலே நாளெல்லாம் பாடுபடும் தொழிலாளியைவிட ஒரு வடநாட்டுக்காரன் அதிக ஊதியம் பெறுகிறானே; இது மாற்றியமைக்கப்பட வேண்டாமா?—என்று கேட்டால் அவசரக்காரர்கள் சிலர் பதில் பேசுகிறார்கள், வடநாட்டுக்காரர்களும் தொழிலாளிகள்தானே?—என்று!

பாவம்; விரிந்த நோக்கம்கொண்டிருப்பதாக நினைத்துக்கொண்டு, தென்னாட்டவரின் சுருங்கிய வயிற்றினைப் பார்க்க முடியாதவர்கள் அவர்கள்; ஏனெனில் அவர்களை யெல்லாம் ஆட்டி வைத்துக்கொண்டிருப்பது வடநாட்டுத் தலைமைப் பீடம்! அதனால்தான் அவர்கள் ஒரு தென்னாட்டுக்காரனுக்கும் ஒரு வடநாட்டுக்காரனுக்கும் வருமானத்திலே உள்ள ஏற்ற பேதத்தைக் கண்டும் சித்தம் கலங்காமல் சும்மாயிருக்கிறார்கள்!

அதனால்தான் தென்னகத்தின் புது வாழ்வுக்கு வேறு மாற்று ஏதுமில்லாத வகையிலே இன்று வளர்ந்து வரும் தி.மு. கழகம் 'திராவிடப் பாட்டாளி மக்களே! ஒன்று சேருங்கள்!'—என்னும் எழில் மிக்க வார்த்தைகளை மே தினச் செய்தியாக எக்காள மிட்டுக் காட்டுகிறது; அவர்களது எழில் மிக்க எதிர்காலத்தினைக் கருத்தில் கொண்டு!

★

# நான்காவது ஆண்டு.

'முரசொலி' தனது இலட்சியப் பாதையிலே மூன்றாண்டுகளை முடித்துக் கொண்டு; நான்காவது ஆண்டிலே அடியெடுத்து வைத்திருக்கிறது. தாயக விடுதலைக்காக தலையை அறுத்துக் கொடுக்கவும் தயங்கமாட்டாத பட்டாள வீரர்களைத் தயார் செய்திடும் தூய பணியினை மேற்கொண்டு; வாரந்தோறும் தரங்குறையாத இலட்சிய விருந்து படைத்து வரும் 'முரசொலி' நமது விடுதலைப் படைக் களத்திற்கு எழுத்துத் துறையிலே கிடைத்திருக்கும் வாளாகவும்; மாற்றுக் கட்சி நண்பர்கள் அவ்வப்போது அடுக்கடுக்காய் தொடுத்து வரும் கண்டனக் கணைகளுக்குத் தக்க பதில் கூறித் தருக்கர்களின் துடுக்கடக்கும் கேடயமாகவும்; கொள்கை விளக்கம் தந்து இலட்சிய புரி நோக்கி அழைத்துச் செல்வதிலே உற்றதோரு பரியாகவும் இருந்து, கழகத் தோழர்கள் ஒவ்வொருவருக்கும் தேவையான விதத்திலே 'போர்ப் பணி' யாற்றி; தனது பிறந்த கடமையைத் தவறின்றிச் செவ்வனே புரிந்து வந்திருக்கிறது.

'முரசொலி' உணர்ச்சி வசப்பட்டு உண்மைக்குப் புறம்பானவற்றை உளறிக் கொட்டுவதில்லை.

கடமை, கண்ணியம், கட்டுப்பாடு—இதில் எள் முனையும் தவறுவதில்லை என்று மக்களது மாமன்றத்திலே எடுத்திருக்கும் பெயரினை அது பிறவிப் பயனாகக் கருதி; கருமமே கண்ணாகிக் காரியமாற்றி வந்திருக்கிறது! அதன் அழகான அமைப்பையும்; மிடுக்கான தோற்றத்தையும்; பத்திரிகையை வியாபாரமாகக் கருதாமல் அதிகச் செலவு செய்து பக்கத்திற்குப் பக்கம் படங்கள் வெளியிடுவதையும் கண்டு எதிர் கட்சிக்காரர்கள்கூட மலைத்துப் போயிருக்கிறார்கள். இது முரசொலிக்குப் பெருமை; அதை அன்றாடம் வளர்த்து வரும் வாசகர் பெருமக்களுக்குப் பெருமை!

இந்திய உப கண்டத்திலே சிசு மரணம் அதிகம்; மிக மிக அதிகம்! பத்திரிகைகளும் அப்படித்தான்; சிசுவாக இருக்கும்போதே புதைகுழி தேடிச் சென்ற ஏடுகள் ஏராளம்; ஏராளம்! அதுவும் தமிழகத்தின் பத்திரிகை யுலகில் தோன்றுவதும்; மறைவதும் அன்றாடச் செய்திகள்!

—இந்த நிலையில் 'முரசொலி'யை மூன்றாண்டுகாலமாக வளர்த்து விட்ட வாசக நண்பர்களாகிய உங்களுக்கு நன்றியுடன் கைலாகு தருகிறோம்; இனிவரும் நாட்களில் உங்கள் உளமார்ந்த ஒத்துழைப்பையும் வேண்டுகிறோம்; வணக்கம்!

★



# "சாத்திரம் பார்க்காதீர்!"

அ. ராஜா

"செல்வம் இறந்து விட்டான்— ரத்தினம்"–தந்தியைப் பார்த்து சிறிது நேரம் செயலற்று விட்டிருந்த நான், நினைவு வந்து மேஜைப் பக்கம் திரும்பியபோது 'செல்வம்—தங்கம்' திருமண அழைப்பிதழ் என்னைப் பார்த்து ஏளனம் செய்வது போலிருந்தது. எந்த வீட்டிற்கு மங்கல வாழ்த்து நேற்று தான் அனுப்பினேனோ அதே வீட்டிலிருந்து இன்று மரணத்தின் அழுகுரல்! இயற்கையின் இந்த வேதனை விளையாட்டை எண்ணி என் உள்ளம் வெதும்பியது. வரப்பு கட்டியும் நிற்காமல் கீழே கொட்டிய கண்ணீர்த் துளிகள் காய்வதற்குள் ஒரு வாரம் விடுமுறைக்கான கடிதமொன்றை எழுதி வைத்துவிட்டுப் புறப்பட்டேன் சென்னையை நோக்கி. அல்ல, சோகச் செய்தி வந்த அத்திக்கை நோக்கி. மனமுடைந்து கிடக்கும் என் நண்பன் ரத்தினத்திற்கு நான்தான் ஆறுதலாக இருக்க முடியும் என்ற எண்ணத்தோடு.

என் இதயத்திலிருந்து கிளம்பிய ,புகையை ரயில் கக்கிக் கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தது. ஆனால் வெளிப்புறக் காட்சிகள் பின்னே செல்வது போல, என் சிந்தனையும் பின் நோக்கிச் சென்றது, ஏழு தலைமுறைகளுக்குப் பின்னால்!

★

திருக்குருங்குடி ஓர் அழகிய சிற்றூர். அங்கே வள்ளிநாயகத்திற்கு சொல்லி வைத்தாற்போல் ஓர் ஆணொன்றும், பெண்ணொன்றும் பிறந்தன. ஊர்க்கோடியிலுள்ள அரசமரத்தடி 'பேச்சிலர்' பிள்ளையார்தான் தன் மனைவிக்கு அத் தங்கச் சிலைகளைத் தந்தார் என்று அக்கம் பக்கத்தாரோடெல்லாம் பெருமையாகப் பேசிக் கொள்வார். குளத்தங்கரையிலிருந்து திரும்பும்போதெல்லாம் அந்த விநாயகனை வலம் வராவிட்டால் அவருக்கு நிம்மதி இருக்காது. 'என் அப்பன் அந்தக் காலத்தில் எழுதி வைத்ததெல்லாம் தப்பாகுமா' என்று எதற்கெடுத்தாலும் சாஸ்திரத்தை துணைக்கழைக்காவிட்டால் சாப்பாடு செல்லாது அவ்வைதீக பக்திப் பழத்திற்கு.



தலைமுறை தலை முறையாய்
தவங்கிடந்து பெற்ற
பைங்கொடி தங்கம்

அவருடைய மக்கள் — கணபதியும், தங்கமும்—கால ஓட்டத்திலே வளர்ந்து பெரியவர்களாயினர். தங்கத்திற்கு மணமுடிக்க வேண்டுமே என்ற கவலை குடைந்தது வள்ளி நாயகத்திற்கு. ஆனால் அந்தக் குடைச்சல் அவரை அதிகநாள் அரிக்கவில்லை. காரணம் அவ்வளவு சீக்கிரம் வரன் கிடைத்தது. குறித்த காலத்தில், பொருத்தமான நாள் நட்சத்திரத்தில், அம்மி அருந்ததி சாட்சியாக, கல்யாணமும் 'ஜாம், ஜாம்' என்று நடந்தது.

ஆனால் தங்கம் கொடுத்து வைக்காத பேதையானாள்! யார் செய்த பாவமோ, எந்த ஜோசியன் செய்த கோளாறோ. அல்லது அந்தப் பிள்ளையாருக்குத்தான் என்ன கோபமோ, மணமான மூன்றும் மாதத்திலேயே தன் கணவனை 'முழுங்கிவிட்டாள்' அவள்! பூவோடும், பொட்டோடும், பொற்றாலியோடும் போக வேண்டும் என்று விரும்பியவள், அவற்றை ஏறெடுத்துப் பார்க்கவும் முடியாத நிலைக்கு ஆளாக்கப்பட்டாள்.

மகளுடைய வெற்றுக் கழுத்தைக் காணச் சகிக்காத தாய், மகளுக்குப் பதிலாக பூவோடும் பொட்டோடும் போய்விட்டாள். 'எல்லாம் தலைவிதி; அவன் விட்ட வழி' என்று ஆத்மசாந்தி யடைந்தார் வள்ளி நாயகம்!

ஊரிலே திருவிழா, திருமணம் என்று நல்ல பல காரியங்கள் நடைபெறும் பொழுதெல்லாம் தங்கம் 'ஒன்றையும் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே; அந்தப் பாழாய்ப் போன தெய்வம் என்னை இந்த நிலைக்கு ஆக்கிவிட்டதே, இதைவிட என்னை சாகடித்திருக்கலாமே' என்று பொருமிப் பொருமி, மணற் கேணியாக்கிக் கொண்டாள் தன் விழி இரண்டையும். எத்தனையோ நாட்கள் தன் ஆசைகளுக்கெல்லாம் சேலைத் தலைப்பின் துணையை நாடினாலும், அன்று அவளால் தன் வேதனை நெஞ்சத்திற்கு வேலி போட முடியவில்லை.

★

அன்று ஊரிலே ஒரு திருமணம் இரட்டைக் குதிரைகள் பூட்டிய சாரட்டில் தம்பதிகள் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ள ஊர்வலமாக வந்து கொண்டிருந்தனர். மேள ஒலியும், நாயன இன்னிசையும் தங்கத்தை, தன் திருக் கல்யாண தினத்திற்கு இழுத்துச் சென்றது.

ஊர்வலம் தங்கம் வீட்டை யடைந்தது. தங்கள் பக்கத்தில் வந்துகொண்டிருந்த வாலிபன், சாத்திக் கிடக்கும் தங்கள் வீட்டு மாடியை முறைத்துப் பார்ப்பானேன் என்று தங்கள் விழிக் கோணங்களை மேலே செலுத்தினர்கள் வள்ளி நாயகமும் மகன் கணபதியும்.

அங்கே தங்கம் ஊர்வலக் கோலத்தை, மகிழ்ச்சி கலந்த வேதனையோடு அள்ளிப் பருகிக்கொண்டிருந்தாள்! மீண்டும் அவ்வாலிபனைப் பார்த்தனர் தந்தையும் தனயனும். அந்த வாலிபனோ தன் பார்வையை அப் பாவையிடமிருந்து எடுக்கவில்லை. தந்தையும் தனயனும் ஒருவர்க்கொருவர் பார்த்துக் கொண்டனர். நச்சுத் தீர்மானத்தைக் கக்கிக் கொண்டன அந் நான்கு கண்களும்!

மறுநாள் வீட்டுப் பின்புறத் தோட்டத்தில் குழியொன்று வெட்டப்பட்டது. குழியைத் தோண்டி அதை ஒரு பாதாள அறையாக்குவதற்கு முழுதாக மூன்றுநாள் எடுத்துக்கொண்டனர். "எதற்கப்பா இந்தப் பாதாள அறை?" என்றுகளங்கமற்றுக் கேட்ட தன் குழந்தை தங்கத்திற்கு, வள்ளி நாயகம் அளித்த பதில், "திருடர் பயம் அதிகமாக ஆகி விட்டதம்மா ஊரில். வீட்டிலுள்ள தட்டுமுட்டுச் சாமான்களையும், வெள்ளிப் பாத்திரங்களையும் இங்கே தான் பதுக்கி வைக்கப் போகிறோம்" என்பதுதான். உண்மை தெரியுமா அப் புள்ளி யயிலுக்கு?

அப்பாதாளக் குழியில் எவருக்குந் தெரியாமல் பத்து, இருபது மூட்டை கம்பு தானியத்தைக் கொண்டுவந்து கொட்டி நிரப்பினார்கள். ஒரு நூலேணியை உள்ளே தொங்கவிட்டு, சில பழைய பாத்திரங்களையும் வெளியே எடுத்துப் போட்டு, "ஒவ்வொன்றாக உள்ளே வைத்து விட்டு வாம்மா" என்று அன்புக் கட்டளையிட்டார் தந்தை. இருட்டிலே உள்ளே என்ன இருக்கிறது என்றே தெரியவில்லை அவளுக்கு. கையில் ஒரு பாத்திரத்தை எடுத்துக் கொண்டு உள்ளே இறங்கினாள்.

தானியக் குவியல் மீது கால் வைத்தாளோ இல்லையோ, 'சரக்' சென்று நூலேணியை அறுத்துவிட்டனர், அக்கல் நெஞ்சர்கள்!

"ஐயோ பாவிகளே, அநியாயமா கொல்றீங்களே! இனி ஏழேழு தலைமுறைக்கும் பொண்ணைப் பாப்பீங்களா நீங்க..."–அவள் முடிக்கவில்லை வழவழப்பான கம்பு அவள் பாரத்தைத் தாங்கிக் கொள்ள முடியாமல் வழிவிட்டது. உயிரோடு சமாதியானாள் அந்த உயிரோவியம். ஊருக்குப் பயந்த அந்த உத்தமர்களின் தயவாலே!

தனக்குத்தான் வாழ்வில்லை, வாழக் கொடுத்து வைத்த அவ் வாலிப உருவங்களின் திருமேனியையாவது கண்டு களிக்கலாம் என்று நினைத்த அச் சிதளப் பிறை ,நிலவுக்கு கிடைத்த பரிசு அதள பாதாளப் படுகுழி! .

எங்கே, இன்னும் உயிரோடிருந்தால் இவ்விதவைப் பெண் விரகதாபத்திற்கு இரையாகி, அதனால் தம் குடும்பத்திற்குக் களங்க விதையூன்றி விடுவாளோ என்று அவள் எண்ணத்தை தப்பர்த்தம் செய்து கொண்டு அந்தக் கெடுமதியாளர்கள் அவளை காலாகாலத்திற்கும் வெளியே தெரியாத காராக்கிரகத்தில் பூட்டிவிட்டனர்!

ஆனால் அவர்களுக்குத் தெரியுமா, அவள் ,கடைசியாகக் கதறிக் கொடுத்த சாபம், வருங்காலத்தில் நல்ல விளைச்சலை காண்பிக்கப் போகின்றது என்பது!

ஆமாம்! ஏழு தலைமுறைக்கு அவள் இட்ட சாபம் அக் குடும்பத்தை விட்டு நீங்கவேயில்லை. ஒவ்வொரு தலைமுறையும் என்னென்னவோ செய்து பார்த்தனர். ஏறாத கோவில் இல்லை; பாராத தெய்வம் இல்லை; சுற்றாத மரமில்லை; கால் எட்டாத க்ஷேத்திரமில்லை; ஒன்றும் பலனளிக்கவில்லை. ஒருவர்க்காவது பெண் என்ற பேசும் சித்திரம் பிறக்கவில்லை 'ஆண்டவ'னுக்கே அப் பெண்ணின் சாபத்திற்கு முன் சக்தியில்லை போலும்!



அந்தத் தங்கத்துக்குரியவன்;
பணத்தாசையால் 'பாசம்'
பறிக்கப்பட்ட
பரிதாபத்திற்குரிய ரத்தினம்.

ஏழு தலைமுறை கழிந்து எட்டாவதுதான் பொன்னம்பலம் அப்பப்பா! அவருக்கு பெண் பிறந்தபோது இருந்த ஆர்ப்பாட்டமும், ஆரவாரமும் ஏராளம்! வானவேடிக்கை என்ன, வகைவகையான சாப்பாடு என்ன...,எந்தக் குடும்பத்திலும் பெண் குழந்தை பிறந்ததற்கு அத்தனை குதூகலம் இருக்க முடியாது!' என்ன நினைத்தார்களோ, அப்பெண்ணுக்கு மீண்

✻ தொடர்ச்சி 8–ம் பக்கம்

குளித்தலை உயர்நிலைப் பள்ளியில், 16—4—57 இலக்கிய மன்ற சார்பில் நடைபெற்ற விழாவில், தேசிய வளர்ச்சித் திட்ட அதிகாரி திரு. சுப்ரமணியம் அவர்கள் தலைமையில், தோழர் மு. க. "குறளோவியம்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினர்... அவ்வமயம் பள்ளித் தலைமை ஆசிரியர், குளித்தலை உயர்நிலைப் பள்ளியில் இடவசதி குறைவாக இருப்பதை சுட்டிக் காட்டி அதற்கான உதவிகளைச் செய்யுமாறு தேசிய வளர்ச்சித் திட்ட அதிகாரியையும், மு. க. வையும் கேட்டுக் கொண்டார். அதனை யொட்டியும் மு. க. கூறிய பதில் இத்துடன் இணைத்துள்ளது.

# 'பெரியாரைத் துணைக் கோடல்'

"குளித்தலைப் பள்ளியிலே இடமில்லை; ஆகவே ஒரு சிறுவன் மாடுமேய்த்துக் கொண்டிருக்கிறான்—என்கிற நிலை இங்கு ஏற்படுமேயானால் அது நாம் எல்லோரும் தலைகுனியக்கூடிய ஒரு வெட்கக் கேடான காரியம்தான்! அந்த மாணவன் மாடு மேய்க்கும் நேரத்திலே, தான் செய்யும் குறையை உணரமாட்டான்; அது போலவே அவனது பெற்றோர்கள், அவன் மாடு மேய்த்து பொழுது போக்குகிற நேரத்தில், தாங்கள் செய்யும் தவறை உணரமாட்டார்கள். அந்த மாணவன் இருபது வயதை அடைந்து, அவனுக்குத் திருமணத்திற்காகப் பெண் பார்க்கின்ற நேரத்திலே, பெண் வீட்டார் 'பையன் எவ்வளவு படித்திருக்கிறான்?' என்று கேட்கும் போது, பெற்றோர் உணருவார்கள் 'எவ்வளவு பெரிய தவறைச் செய்து விட்டோம்' என்று!

தாய் தகப்பனர் ஏழையாகி விட்ட காரணத்தால்—பையன் வேலை தேடி அலையும்போது—அலுவலகத்திலே சென்று 'ஐயா, எனக்கொரு வேலை' என்று கேட்க—'நீ எதுவரை படித்திருக்கிறாய்?' என்று அங்கிருப்போர் கேட்கும் நேரத்தில் அவன் உணருவான், தான் செய்த தவறை — தன் பெற்றோர் தனக்கிழைத்த தீங்கை!

ஆகவேதான் அத்தகைய எதிர்கால சமுதாயம் நம்மைச் சபிக்காமல் இருப்பதற்கும், அவர்களுடைய சாபத்திற்கு ஆளாகாமல் இருப்பதற்கும், இன்றைய தினம் நாம் கொஞ்சம் அறிவோடு நடந்து கொள்ள வேண்டுமானால், நிச்சயம் 'இடமில்லை பள்ளியிலே' என்று சொல்லக்கூடிய நிலையில் தலைமை ஆசிரியரும், அத்தகைய இடவசதி செய்துதர முடியாத நிலையில் நானும் இல்லாமல், 'இடமிருக்கிறது; நீங்கள் கேட்ட இடம் தந்திருக்கிறோம்; பிள்ளைகளையும் அனுப்பியிருக்கிறோம். இவ்வளவையும் தந்திருக்கிறோம்; நீங்கள் கற்றுத் தந்த பாடங்கள் என்ன?' என்று நாம் கேட்கிற நிலையிலே மாற வேண்டும் என்றுதான் நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன்...

ஆகவே இந்த வகையில் கல்வி வளர நாம் நம்முடைய பள்ளியை வளர்ச்சி பெறச்செய்து, வளர வேண்டிய எதிர்கால சமுதாயத்தை — இளைஞர் சமுதாயத்தை வெற்றிப் பாதையை நோக்கி நடத்திச்செல்ல ஆவன செய்வோம்!...

இந்த அளவில், தலைமை ஆசிரியரின் 'குறையோவியத்தை' விட்டுவிட்டு எனக்குத் தந்திருக்கும் தலைப்புக்கு வருகிறேன். "குறளோவியம்" என்ற தலைப்பில் இந்த இலக்கிய மன்றத்தின் சார்பில் பேசப்படுகின்ற நேரத்தில், நம் தலைவரவர்கள் குறிப்பிட்டதுபோல நான் ஏதோ புதிய புதிய விஷயங்களைச் சொல்லப் போகிறேன் என்றோ, திருக்குறள் இந்த நாட்டிலே மக்களிடையே செல்வாக்கு பெருத ஒரு நூல்; அதை நாமெல்லாம் எடுத்துச் சொல்லித்தான் இனி அதற்குப் புதிய செல்வாக்கு வளருமென்றோ நான் குறிப்பிட விரும்பவில்லை...

திருவள்ளுவர் நமக்குத் தந்திருக்கிற குறள்—அவைகளிலே சொல்லப்பட்டிருக்கிற அறிவுரைகள்—தமிழர்கள் ஏகமனதாக பாராட்டப்படக் கூடியனவா, அல்லவா? அவர் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்கிற முப்பெரும் பால்களை வகுத்து—அவற்றிலே பலப்பல அதிகாரங்களை வகுத்து—அந்த அதிகாரங்களிலே அருமையான—அழகு சிந்துகின்ற — எழில் சொட்டுகின்ற—அறிவு மணம் கமழுகின்ற — அறிவொளி பரப்புகின்ற குறள்களை நமக்குத் தந்திருக்கிறார் என்றால், அந்தக் குறள்களிலே எந்தெந்த இடங்களிலே அணி இருக்கிறது; தமிழர்கள் புரிய வேண்டிய பணி பற்றிய குறிப்புகள் இருக்கின்றன; இந்த நாட்டுக்குத் தேவையான கருத்துக்கள் இருக்கின்றன; மனிதனுடைய வாழ்க்கைக்குத் தேவையான எண்ணங்கள் பொதிந்து கிடக்கின்றன—என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

குறளைப் பற்றி வந்திருக்கிற அர்த்தங்கள்—உரைகள்—வியாக்யானங்கள்—பலதரப்பட்டவை. பல மொழிகளிலே மொழி பெயர்க்கப்பட்டு, மேல் நாட்டிலே இருக்கின்ற நூல் நிலையங்களிலே இடம் பெற்றிருக்கின்ற திருக்குறள், தமிழ் நாட்டில், பலரால், பல வகையிலே தாழ்த்தப்பட்டிருக்கிறது. அப்படித் தாழ்த்தியவர்களில் குறளைப் புராண காலத்துக்கு இழுத்துச் சென்றவர்களும், சரித்திர காலத்துக்கு இழுத்துச் சென்றவர்களும், அதை வேறு வேறு பக்கம் திருப்பிக் கொண்டு போகிறவர்களும் ஏராளம்; ஏராளம்!

1330 குறட்பாக்களிலே எண்ணிறந்த குறள்கள் இன்றைய காலத்திற்கும் ஒத்துவரக்கூடிய குறள்கள். ஒன்றிரண்டு அந்தக் காலத்து வாழ்க்கையைச் சொல்லுகின்றவையாக இருக்கலாம். அதற்காக வள்ளுவர் எழுதியவைகளில் சில இடைச் செருகல்கள் அவை; வள்ளுவரின் கருத்தல்ல அவை—என்று ஆராய்வதைவிட; அவற்றில் என்னென்ன சொல்லப்பட்டிருக்கின்றன; எனப்படி சொல்லப்பட்டிருக்கின்றன — என ஆராய்வது மிகமிக சால்புடையது; பொறுத்தமுடையது —என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

... வள்ளுவர் 'வாழ்க்கைத் துணை நலம்' என்றுதான் குறளில் குறிப்பிடுகிறார். இன்றைய தினம் ஆங்கிலத்திலே 'ஒய்ப்' என்றும், தமிழிலே நினைத்துக் கொண்டு பாரியாள் என்றும், கிரகலட்சுமி என்றும் அழைக்கப்படுகின்ற பெண்ணினத்தை, வள்ளுவர் மிகமிக அழகாகச் சொன்னார்; வாழ்க்கைத் துணை நலம் என்று! வாழ்க்கைத் துணைவி என்றுகூட சொல்லவில்லை; வாழ்க்கைத் துணை நலம் என்கிறார். அந்தப் பகுதியிலே அவர் குறிப்பிடுகிறார்:

"தெய்வம்தொழாள் கொழுநற் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

—அதற்கு இன்றைய தினம் நமக்குத் தரப்படுகின்ற பொருள்கள் — பரிமேலழகர் போன்றவர்கள் தந்திருக்கிற உரைகள்—தெய்வம் தொழாள் கொழுநன் தொழுதெழுவாள்' —தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுதெழுகிறாளே அந்தப் பெண், 'பெய்' என்று சொன்னால் உடனே மழை பொழியும்! இது நாம் இதுவரை கற்றிருக்கிறோம்—நமக்குத் தரப்பட்டிருக்கிற பொருளாகும். கணவனைத் தெய்வமாகக் கருதுகிற ஒரு பெண், ஊரிலே மழை இல்லாவிட்டால், வயல் வெளியிலே வந்து நின்று கொண்டு, 'வருணபகவானே, வா' என்று அழைத்தால், உடனே வருணபகவான் முத்து முத்தாக மழையைக் குவிப்பான் என்றுதான் அந்த உரைகளில் காணக் கிடக்கிறது. ஆனால், அந்தக் குறளை இலக்கண ரீதியாக—நல்ல தமிழறிவோடு சிந்தித்துப் பார்க்கிற நேரத்தில் — ஆராய்ந்துப் பார்க்கிற நேரத்தில்—நமக்கு என்ன பொருள் கிடைக்கிறது? பெண்ணை உயர்த்திப் பேச முனைந்த வள்ளுவர்—பெண்ணை எதற்கு ஒப்பிடுகிறார் என்றால், மழைக்குச் சமானமாகக் குறிப்பிடுகிறார். அதுவும் எந்த் மழைக்கு? பெய்யெனப் பெய்யும் மழைக்கு; 'பெய்' என்று சொன்னவுடன் பெய்தால் அது எப்படிப்பட்ட மழையோ —'வா' என்று அழைத்தவுடன் வந்தால் அவன் எப்படிப்பட்டவனோ—'போ' என்று சொன்னவுடன் போய்விடுபவன் எப்படிக் கட்டளைக்கு உட்படுகிறானோ, ஆட்படுகிறானோ—அதுபோல 'தெய்வம் தொழாள் கொழுநன் தொழுதெழுவாள்' —கணவனைத் தெய்வமாகக் கருதுபவள் 'பெய்' என்ற உடனேயே பெய்கின்ற மழைக்குச் சமமாவாள்—என்றுதான் வள்ளுவர் பெருந்தகையார் வாழ்க்கைத் துணை நலம் என்கின்ற தலைப்பிலே குறிப்பிடுகிறார்.

இதை எந்தப் பண்டிதர்களும்—நிச்சயமாகச் சொல்லுகிறேன்; மறுக்க முடியாது! 'பெய்யெனப் பெய்யும் மழை' என்றால், 'பெய்' என்று சொன்னவுடன் பெய்யும் மழைக்கு ஈடாகும் என்பதே தவிர, 'சொன்னால் மழை பெய்யும்' என்ற பொருளல்ல; அந்த வார்த்தைக்கு அங்கே இடமேயில்லை. அப்படி இருக்கும்போது, இவர்களாகவே ஒன்றை சிருட்டித்துக் கொண்டு, பெண்களை இழிவுபடுத்த வேண்டுமென்பதற்காகவேதான் குறளுக்கு மறுப்பு எழுதியிருக்கிறார்கள் என்று நான கூற விரும்புகிறேன்.

குறளை வைத்துக் கொண்டு ஒரு பெண்ணைக் கூப்பிட்டு, "அம்மையே! ஊரிலே

மு. கருணாநிதி



இல்லை; கொஞ்சம் மழை பெய்யச் சொல்!" என்றால், அந்தப் பெண் தெருவிலே வந்து நின்று, அல்லது கழனிக்கு அருகிலே சென்று, 'வருண பகவானே! மழையைத் தா!' என்று சொன்னால், சொன்னவுடன் மழை பெய்யவில்லை என்றால், என்ன கருதுவது? "ஓகோ, திருக்குறளின்படி, திருக்குறள் தந்திருக்கிற இலக்கணத்தின்படி இந்தப் பெண் கணவனைத் தெய்வமாக மதிக்கவில்லை. ஆகவே 'மழையே வா' என்றவுடன் மழை பெய்யவில்லை!" என்று அந்தப் பெண்ணுக்கு நிச்சயம் இழுக்கு கற்பித்துவிடுவோம். இப்படி யாராவது சில குறும்புக்காரர்கள் கிளம்புவார்கள் என்று கருதித்தானோ என்னவோ, வள்ளுவர் பெண்கள் பெய் எனில் பெய்யும் மழைக்கு ஒப்பாவார் என்று மிக மிகத் தெள்ளத் தெளிவாக—யாரும் இங்கு அங்கு இழுத்து அசைத்து எந்த விதப் புதிய பொருளும் கொள்ள முடியாத வகையிலே எழுதி வைத்திருக்கிறார். ஆனாலும் சிலர் கொஞ்சம் இழுத்துப் பார்த்து, கொஞ்சம் அசைத்துப் பார்த்து, கொஞ்சம் புராணிகக் 'கலரும்' கொடுத்து குறளை கொஞ்சம் தங்கள் விருப்பத்துக்கு மாற்றி வைத்தார்கள்.

அதைப் போலவே இன்னுமொரு குறள்......மிக மிக வேடிக்கை! இலக்கணம் தெரிந்த ஆசிரியர்கள்; இலக்கணம் புரிந்த அறிஞர்கள் நல்ல முறையிலே உணருவார்கள். அதற்கு உரை எழுதிய வரதராசனர் கூட — கந்தசாமி கூட—குறிப்பிலே எழுதுகிற நேரத்திலே, 'இதற்கு சுப்பிரமணிய பிள்ளை இப்படி உரை கூறுவார் — அதுவும் ஓரளவு பொருந்துமாறு' என்று எழுதி வைத்தார்கள்!

என்ன குறளது?

"ஆபயன் குன்றும்,
அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்"—

ஊரிலே ஆண்டுகொண்டிருக்கிற அரசன் மக்களைச் சரியாகக் காப்பாற்றாவிட்டால் என்ன நேரும்? வள்ளுவர் சொல்லுகிறார்; ஆபயன் குன்றும் என்று! ஆபயன் என்றால்; 'ஆ' என்ற ஒரு எழுத்துக்குப் பொருள் — ஆகவேண்டிய! 'ஆபயன் குன்றும்' என்றால் ஆகவேண்டிய காரியங்கள் ஆகாது! ஏன்? காவலன் காவான் எனின்—செங்கோல் சரியாக நடைபெறாவிட்டால், மன்னன் சரியானபடி ஆட்சிக் கயிற்றைக் கையிலே பிடித்திராவிட்டால், ஆபயன் குன்றிவிடும்—ஆகவேண்டிய காரியங்கள் கெட்டுவிடும்! அறுதொழிலோர் நூல் மறப்பர்—ஆறு வகையான தொழில்களைச் செய்கின்றவர்கள் தங்களுடைய வித்தைகளை எல்லாம் மறந்துவிடுவர்; காவலனுடைய பொறுப்பற்ற தன்மையால்—என்று வள்ளுவர் குறிப்பிட்டிருக்கிறார்.

புதிய பொருள் எழுதியவர்கள் என்ன சொல்லுகிறார்கள்? 'ஆபயன் குன்றும்' என்றால்—ஆட்சி சரியாக நடைபெறாவிட்டால்—'ஆ' என்றால் பசுமாடு; 'பயன் குன்றும்' என்றால் பால் கொடுக்காது—பசு மாடு பால் கொடுக்காதாம்; ஆட்சி சரியாக நடைபெறாவிட்டால் நம்முடைய நாட்டிலே பசுமாடு பால் கொடுக்காமலா இருக்கிறது? ஹிட்லர் ஆண்ட நாட்டிலே பசுமாடு பால் கொடுக்காமலா இருந்து விட்டது? முசோலினி ஆண்ட நாட்டிலே பசுமாடு பால் 'தரமாட்டேன்' என்று சொல்லி விட்டது? இவர்கள் தங்கள் தமிழறிவை இழுத்து வளைத்துக் காட்டி, திருவள்ளுவனைப் பொய்யனாக்குகிறார்கள்; அறிவற்றவனாக்குகிறார்கள்! உள்ளபடியே 'பசு மாடு பால் கொடுக்காது' என்ற பொருள் படும்படி எழுதியிருக்க வேண்டுமானால், 'ஆப்பயன் குன்றும்' என்று எழுதியிருக்க வேண்டும், 'ப்' என்ற ஒற்றைப் போட்டு! அந்த 'ப்' இல்லாத காரணத்தால், 'ஆபயன் குன்றும்' என்கின்ற நேரத்திலே ஆகவேண்டிய காரியங்கள் நடைபெறாது—என்றே பொருள்படும். அரசன் சரியாக இல்லாவிட்டால் எப்படி ஆக வேண்டிய காரியங்கள் தான் நடைபெறும்?

அதைப்போலவே 'அறுதொழிலோர் நூல் மறப்பர்' என்கிறார் வள்ளுவர். உரை எழுத வந்த சுப்ரமணிய பிள்ளை 'அறுதொழிலோர் என்பது சரியில்லை; அறிதொழிலோர் என்று இருக்க வேண்டும்; அறிந்ததொழில்களைத் தும் மறந்து விட்டனர் எனப் பொருள்பட, என்கிறார். இந்த நிலைமையிலே குறளுக்கு பல வகையான கருத்துக்கள் தரப்பட்ட காரணத்தால்தான், இன்றையதினம் நாட்டு மக்களிடையே 'குறள்' என்றால் இத்தனை சிறப்புடையது; அதை மேல்நாட்டாரும் விரும்பிப் படிக்கிறார்கள்; ஆகவே சொந்த நாட்டுக்காரர்களே, நீங்களும் படியுங்கள்!' என்று சொல்ல வேண்டிய கேவலமான நிலை—சொல்லித்தீர வேண்டிய மிகமிகக் கேவலமான நிலை நாட்டிலே ஏற்பட்டிருக்கிறது!

குறளுக்குச் சிறப்பா? அதை மக்களுக்கு உணர்த்த வேண்டிய நிலையா? சொல்லவே வேதனையாகத்தான் இருக்கிறது!

1330 குறட்பாக்களும் எப்படிப்பட்டவை என்று ஒரு புலவர் சொன்னார்:

"கடுகைத் துளைத்து ஏழு கடலைப் புகட்டிய குறள்" என்று! உடனே ஔவை சொன்னார்: 'அல்ல; அல்ல; அணுவைத் துளைத்து ஏழு கடலைப் புகுத்திய குறள்,' என்றார். அந்த அளவுக்கு அணுவிலே கூட ஏழு கடலைப் புகுத்தினாற் போன்ற திருக்குறள்—என்று அன்றையதினம் சொல்லப்பட்டது. அத்தகைய குறள் இன்றைய தினம் மக்கள் மன்றத்திலே மதிப்பு குறைந்த நிலையிலே இல்லாவிட்டாலும், அலட்சியப்படுத்தப்படுகின்ற நிலைமையிலே—அக்கரையற்ற தன்மையிலேதான் மதிப்பிடப்படுகின்றது.

அந்தக் குறளிலே சொல்லப்படுகின்றது; வாழ்க்கைக்கு வேதாந்தம், நாடாளுகின்ற தன்மை, பொருளாதாரப் பிரச்னை, வீரம், காதல், அரசியல்—அத்தனையும் அடங்கிய ஒரு நூல் திருக்குறள்தான். அதிலே அரசியல் இல்லை என்று வாதிட முடியுமா?

"இரந்தும் உயிர் வாழ்தல்
வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்"

—பிச்சை எடுத்துத்தான் சாப்பிட வேண்டும் என்ற நிலை இருந்தால், அத்தகைய உலகத்தை உண்டாக்கியவன் இருக்கிறானே, அவன் கெட்டொழிந்து போகட்டும் என்கிறார்—பொதுவுடமை தாண்டவமாடுகிறதே!

அதுபோலவே வீரம்—எந்தெந்த விதத்திலே? ஒருவன் போர்க்களத்தில் பகைவன் மீது எறிய வேல் இல்லாத காரணத்தால் 'வேல் எங்கே? வேல் எங்கே?' என்று தேடி அலைகிறான். அவனை எதிர்த்து ஒரு யானை வருகிறது. அதை எதிர்க்க ஒரு வேல் தேவை அவனுக்கு; கிடைக்கவில்லை. சுற்றுமுற்றும் பார்க்கிறான், கடைசியில் அவன் மார்பிலே ஒருவேல் பாய்ந்து நிற்பது தெரிகிறது. அதை எடுத்து எறிகிறான். எவ்வளவு வீரம்! எவ்வளவு அழகாக திருவள்ளுவரால் எடுத்துக் கையாளப்படுகிறது என்பதை உணர்ந்து பார்க்க வேண்டும்!

"அதைப் போலவே இங்கு இருக்கின்ற மாணவர்களுக்கு சொல்ல விரும்புகிறேன்...... நம்முடைய தந்தை—நம்முடைய பெற்றோர்—நம்மிடத்தில் என்ன நன்றியை எதிர் பார்க்கிறார்கள்? அது போலவே அவர்கள் நமக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன?—என்பதை வள்ளுவர் எவ்வளவு அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி—எப்படி இருக்க வேண்டும்? 'இவனைப் பெறுவதற்கு இவனுடைய தந்தை என்ன 'தவம்' இருந்தானோ'—என்று

✲ 9-ம் பக்கம் பார்க்க

28—4—57 அன்று ஆசிரியர் மு. க. இல்லத்தில் நடைபெற்ற சட்டசபைக் கட்சிக் கூட்

## சாத்திரம் பார்க்காதீர் ...

✻ 5-ம் பக்கத் தொடர்ச்சி

டும் மறைந்த அத்தங்கத்தின் பெயரையே சூட்டினர்.

தங்கத்தின் பட்டுப் பாதம் தரையைத் தொட்டு விட்டால், எங்கே சிவந்து விடுமோ என்று தங்கள் தோள்களையே தாழ்வாரமாக்கி வளர்த்தனர் பெற்றோர். அக்குழந்தை வளர்ந்த சீரும் சிறப்பும் சொல்ல முடியாதது.

சொர்ணத்திற்கு பொன்னம்பலத்தைப் பொறுப்பாக மன முடித்து விட்டு, மண்டையைப் போட்டுவிட்ட அவள் அண்ணன், அவள் கையில் தன் சிறு மகன் ரத்தினத்தையும் ஒப்படைத்து விட்டார், பாதுகாத்துக் கொள்வாள் என்ற நம்பிக்கையுடன். 'அத்தே, அத்தே' என்றும் 'மாமா, மாமா' வென்றும் வளையவளைய வந்தான் அப்பையன். பொன்னம்பலமும் மகன் இல்லாத குறையை மருமகனிடத்தில் நிவர்த்தி செய்து கொண்டார்..

தங்கம் பிறந்தவுடன், ரத்தினத்திற்குத்தான் அவள் சொந்தம் என்று விளையாட்டாக முடிவு கட்டினர் பெரியோரெல்லாம்.

காலம் போகிற வேகம் கண்ணுக்குப் புலப்படுவதில்லையே—பொன்னம்பலத்தின் கண்டிப்பு அவர்களது காதல் விளையாட்டுக்கு அணை போட்டது.

என்னதான் தன் வீட்டிலேயே வளர்ந்து, முறைக்கு மாப்பிள்ளையானாலும், பொன்னம்பலத்துக்கு, தன் மகளை ரத்தினத்திற்கு மணம் முடிக்க விருப்பமில்லை பெரிய இடத்து மாப்பிள்ளை வேண்டும்; பட்டங்கள் பல பெற்றிருக்கவேண்டும் என்று திட்டமிட்டு வரன் தேட ஆரம்பித்தார். சொர்ணம் தன் கணவரிடம் எவ்வளவோ சொல்லியும் பயனில்லை.

கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போது தான் என் உயிரோடு கலந்து விட்டான் ரத்தினம். ஒரே வட்டிலில் சாப்பிட்டு ஒரே கட்டிலில் தூங்குவோமென்றால் எங்கள் நட்பின் பிணைப்பைப்பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை.

நாளா வட்டத்தில் மாமாவின் பொருள் பொதிந்த போக்கை புரிந்துகொண்டநாங்கள் மறைமுகமாகவும் [illegible]யாகவும் சொல்லிப் [illegible] [illegible]லை.

[illegible]ம்

வேலை கிடைத்தது; போய் விட்டோம்.

பிறகுதான் எங்களுக்குத் தெரிய வந்தது, தங்கத்திற்கு மாப்பிள்ளை பார்த்தாகி விட்டது; யாரோ டாக்டராம்; செல்வம் எம். பி. பி. எஸ். என்று.

திருமணத்திற்கு போக வேண்டும் என்ற விருப்பமேயில்லை ரத்தினத்திற்கு. அவர்கள் முகத்திலே விழிக்கக் கூடாது என்று சங்கல்பம் செய்திருந்தான். ஆனால் நான் தான் கட்டாயப்படுத்தி அவனை அனுப்பி வைத்தேன்.



"காதல் சுரக்கின்ற நெஞ்சிலே கெட்ட 'கைம்மை'யைத் தூர்க்க நினைத்தேனே; தப்பினேன்!"

வழியனுப்பி வைத்தவன் விழிகள்தான் தந்தியைப் பார்த்தவுடன் குளமாயிற்று. ஏழு தலைமுறையாய் தவம் கிடந்து பெற்ற ஒரே பைங்கொடி—கடல் அள்ளித் தந்த சங்கிலும், வெள்ளிக் கிண்டியிலும் பாலூட்டி, பாராட்டி வளர்க்கப்பட்ட பெண்—தங்கம் தன் மணவிழாக் கோலத்தில் மாங்கல்யம் இழப்பதென்றால்? ஐயோ! என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. எனக்கே இப்படியென்றால், அம்மாதுளையைப் பெற்றெடுத்த மாதா பிதாக்களுக்கு; அவளை உயிருக்குயிராய் நேசித்த என் ரத்தினத்திற்கு?

நினைவு தெரிந்த நாள் முதல் குருடாகிக் கிடந்தவனுக்கு பார்வையைக் கொடுத்து, கொஞ்ச நேரத்தில் அதைப் பறித்துக் கொள்வதென்றால்...?

★

சென்னை வந்தது. என் சிந்தனை நின்றது. ஓடினேன் பொன்னம்பலம் வீட்டிற்கு.

ஈமக் கிரியைகளெல்லாம் முடிந்துவிட்டனபோலிருக்கிறது. இடுகாட்டு அமைதி என்னை வரவேற்றது!

அந்த வீட்டிலே நிலவியிருந்த மயான அமைதியை எப்படிக் குலைப்பது; இனிமேல் எப்போது இக் குடும்பத்தில் குறுஞ் சிரிப்பையும், குறும்பு விளையாட்டுகளையும் காண்பது—என்று சிந்தனையிலிருந்த எனக்கு எப்படித்தான் தைரியம் வந்ததோ, 'விடு விடு'வென்று பொன்னம்பலம் அறைக்குள் நுழைந்தேன், ஒரு தீர்மானத்தோடு.

"மாமா! இப்படி எத்தனை நாளைக்குத்தான் பிடித்து வைத்த பொம்மை மாதிரி உட்கார்ந்து கொண்டிருப்பீர்கள்? ஆகவேண்டிய காரியத்தைப் பற்றி யோசிக்க வேண்டாமா?"

"என்னப்பா ஆகவேண்டிய காரியம். அதுதான் எல்லாம் ஆடி ஓஞ்சுப் போச்சே...அந்தப் பாழாய்ப் போன தங்கத்தின் பேர் ராசியோ என்னவோ, அவள் இருந்த நிலைக்கே என் மகளையும் ஆக்கிப்பழி தீர்த்துக் கொண்டுட்டா! எல்லாம் அவளவாள் தலைவிதி...

'ஏன் மாமா, இப்படி தலைவிதி, தலைவிதின்னு அடித்துக் கொள்கிறீர்கள்! எங்கே மாமா போயிற்று அந்தத் தலையிலே இருந்து புறப்படும் மதி? மாண்டு மண்ணாகி விட்டதா? அல்லது உபயோகிக்கத் தெரியாமல் உள்ளே மங்கிக் கிடக்கின்றதா? சிறியவனாக இருக்கிறேனே என்று என்மீது தயவு செய்து கோபப்படாதீர்கள். நான் சொல்வதையும்கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். உங்களைப் போன்றவர்கள் அதை அடகு வைத்து விட்டால்தான் மூலையிலே உட்கார்—முக்காடிட்டுக் கொள்—முகத்திற்கு மஞ்சள் தேடாதே— முல்லை மொக்குகளைச் சூடாதே-என்று கட்டளைப் பிறப்பித்ததன் காரணத்தால்தான் ஒரு தங்கமல்ல மாமா; இன்று நாட்டிலே ஓராயிரம் தங்கங்கள் வேதனையின் வடிவமாகி விட்டனர். அதில் ஆற்றையும், கிணற்றையும், அரை கெஜ கயிற்றையும் உடனே நம்பியவர் எத்தனை பேர்? பருவ தாகத்தை தணிக்க முடியாமல் பாதையிலே தவறியவர் எத்தனை பேர்? தவறிய பாதை தந்தக்கருப் பொருளைத் தாங்க சக்தியற்று தற்கொலையிலே சாந்தி பெற்றவர் எத்தனை பேர்? இத்தனையும் புரிய பயந்தவர்கள் உடல் நொந்து, உள்ளீரல் வெந்து, காலமெல்லாம் கண்ணீர் வெள்ளத்திற்குக் கரைகாணாமல் தத்தளித்தவர் எத்தனை பேர்?... பத்திரிகையிலே படித்துமா—படங்களில் பார்த்துமா உங்கள் பார்வை இன்னும் தெரியவில்லை?

ஆண்டவன் விட்ட வழிக்கு என்ன செய்வது என்று கேட்கிறீர்களா? எங்கே மாமா ஆண்டவன் சொல்லியிருக்கிறான் விதவைக்கு மறுமணம் செய்யக் கூடாதென்று? மறுமணமா: சுற்றத்தாரின் ஏச்சுப் பேச்சுக்கு என்ன பதிலைச் சொல்வது;என்று யோசிக்கிறீர்களா? யார் மாமா சுற்றம்? சோகச் செய்தி கேட்டவுடன் கடனுக்காக இரண்டு சொட்டு கண்ணீர் விட்டு, ஐயோ உனக்காம்மா இந்தகதி? யார் செய்த பாபமோ உன்னை சுத்துது—என்று அனுதாபம் காட்டிவிட்டுப் போய் விடுவார்களே அவர்களா சுற்றம்? சோகத்தில் சுருண்டு போனவர்களுக்கு சோபிதவழி காண்பிக்கத் தெரியாத ஒரு கூட்டமா சுற்றத்தார்? அப்படிப்பட்ட சுற்றம் நமக்குத் தேவையில்லைமாமா!"

"தம்பீ" என்றலறினார் பொன்னம்பலம்—அவரது தொனியிலே பார்வையிலே சம்மதத்தின் அறிகுறி விரலிட்டுக் காட்டியது!

சந்தோஷத்தோடு வெளியேறிய என்னைக்கட்டிச் சேர்த்தணைத்துக் கொண்டான் ரத்தினம். இருவரும் பேசவில்லை. எனக்கு பேசிய களைப்பு; அவனுக்கு பேச முடியாத களிப்பு!

தங்கத்தை நோக்கினேன். தாரை தாரையாகக் கண்ணீரை விட்டுக் கொண்டே என் காலடியில் வீழ்ந்தாள்: "அண்ணா! என்வாழ்வில் விளக்கேற்றிய எங்கள் குலதெய்வம் அண்ணா நீங்கள்!"

தெருவிலிருந்த ஒலி பெருக்கியில் "காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே கெட்ட கைம்மையைத் தூர்க்காதீர்—ஓர் கட்டழகன் திருத்தோளினைச் சேர்ந்திட சாத்திரம் பார்க்காதீர்!" என்ற புதுவைக் குரலாரின் புரட்சி வரிகள் எழுச்சிபெற்று ஒலித்தன.

---

"பிரெஞ்சு நாட்டிலே ஒரு தடவை தோல்விக்கு உட்பட்ட நெப்போலியனை 'எல்பா,' என்ற தீவில் கொண்டு போய் அடைத்தார்கள். அவன் குடியிருந்த தீவைச் சுற்றிலும் கடல் இருந்தது. அவனைத் தீவிற்கு அனுப்பியவர்கள் பாரிஸ் பட்டணத்திலே செங்கோலோச்சிக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அந்தக் கோலு மண்டபத்திலே ஜொலித்த ஜொலிப்புகளை பிரெஞ்சு நாட்டு வீரர்கள் கண்ணாலே காணவில்லை—கண்ணுக்குத் தெரியாத கடலுக்கப்பால் இருந்த தீவைப்பற்றித்தான் அனைவரும் எண்ணிக்கொண்டிருந்தனர் எல்பா தீவைத்தான் அத்தனை வீரர்களின் கண்களும் நோக்கிக்கொண்டிருந்தன என்று பிரெஞ்சு நாட்டு வரலாற்றிலே ஒரு குறிப்புண்டு.

"தோற்ற நெப்போலியன் இருக்கின்ற இடம் வீரர்களுக்கு எப்படி 'புனித ஸ்தல'மாயிற்றோ, அதைப்போல தோற்றுப்போனவர்கள் ஏராளமாக உள்ள தி. மு. கழகத்தைத்தான், 'விடுதலை பெற்றுத் தரக்கூடிய பாசறை' என்று தமிழ் நாட்டு மக்கள் இன்றைய தினம் தீர்மானித்திருக்கிறார்கள்.

—அறிஞர் அண்ணா

---



# தூங்காமை வேண்டும்! ★ ★ ★
# துணிவுடைமையும் தேவை!

✻ 7-ம் பக்கத் தொடர்ச்சி

ஊரார் சொல்லுகின்ற அளவுக்கு மகன் தன்னுடைய வாழ்க்கையை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்கிறார். மகன் செய்யவேண்டிய உதவி இதுவென்றால், அதே நேரத்தில் தந்தை மகனுக்கு ஆற்ற வேண்டிய உதவி என்ன? 'அவையத்து முந்தி இருப்பச் செயல்' என்று கூறுகிறார். தந்தை செய்யவேண்டிய உதவி கடமை—மகனை அவையத்து முந்தி இருப்பச் செயல்! 'அவை' என்றால் மன்றம்; அத்தகைய மன்றத்தில் முதல்வனாக இருக்கச் செய்ய வேண்டிய கடமை தந்தைக்கு உரியது என்று சொல்லுகிறார் வள்ளுவர்.

ஆனால், இந்தக் காலத்திலே தந்தைகளோ, மகனை மன்றத்திலே ஏற்றுவதற்கா விரும்புகிறார்கள்? எங்கே, இவன் மன்றத்துக்குச் சென்று விடுவானோ என்றல்லவா அஞ்சுகிறார்கள்!

வள்ளுவருடைய குறளிலே இம்மாதிரியான நீதிகள் மாத்திரமல்ல; இலக்கிய வளம்மாத்திரமல்ல; நல்ல நல்ல அரசியல் கருத்துக்களும் அதிலே உண்டு!

அவர் சொல்லுகிறார்; ஓரிடத்தில்—பொருட்பாலில்—'பெரியாரைத் துணைக் கோடல்' என்ற அத்தியாயத்தில்-ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள் தங்கள் ஆட்சி சரிவர நடைபெற பெரியாரைத் துணைக் கொள்ள வேண்டும்' என்று சொல்லுகிறார்.

பெரியாரைத் துணைக்கோடல் என்றால் எப்படி? எந்தப் பெரியாரைத் துணை கொள்ளச் சொல்லுகிறார்? எது செய்தாலும் கண்டிக்காமல், ஆதரிக்கிற பெரியாரை அல்ல; என்ன சொல்லுகிறார் தெரியுமா?

"இடிப்பாரை இல்லாத
ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானும் கெடும்"

—தட்டிக் கேட்க ஆளில்லாத மன்னன்—தட்டிக்கேட்கக் கூடிய அத்தகைய பெரியாரைத் துணையாகப் பெற்றிருக்காத மன்னன்—பகைவர்கள் இல்லாமலேயேதானே அழிந்து விடுவான்! மூக்கணாங் கயிறு இல்லாத மாடு எப்படி ஆகிவிடுமோ; அதுபோல கொடுப்பாரிலானும் கெடுவான், இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்—என்று அன்றையதினம் திருவள்ளுவர் அரசியலுக்கு நல்ல விளக்கம் தந்திருக்கிறார்.

அறத்தைப் பற்றி சொல்லுகின்ற வள்ளுவர் எவ்வளவு அழகான வார்த்தையைக் கையாண்டிருக்கிறார்.

"என்பில் அதனை வெயில்
போலக் காயுமே
அன்பிலதனை அறம்"

—அன்பில்லாதவர்களை அறம் காய்த்து, தீய்த்து, மாய்த்துக் கொன்று விடும். எப்படி அன்பில்லாதவர்களைத் தர்மமானது, அறமானது கொன்று விடும் என்று சொல்லுகிறார்? 'அன்பிலதனை' என்று சொல்ல வந்தவர், 'அன்பிலதனை அறம்' என்று சொல்ல வந்தவர் அதற்கு உதாரணமாக 'என்பிலதனை வெயில்போல்' என்கிறார். எலும்பு இல்லாத ஜீவராசிகளை வெயில் காய்வதுபோல்—புழுக்களை வெயில் காய்வதுபோல்! புழு என்று சொல்ல வந்த வள்ளுவர், புழு என்ற வார்த்தையைச் சொல்லாமல், அவருக்கும் அந்த அழகு மொழியிலும் அடுக்கு மொழியிலும் அந்தக் காலத்திலேயே இருந்த ஆசையின் காரணமாக—

'என்பிலதனை வெயில் போலக்
காயுமே
அன்பிலதனை அறம்' என்கிறார்

கொஞ்சம் குறும்புக்காரர் போலும் வள்ளுவர். எதிர்கால அரசியலைத் தெரிந்தவர் போலும்; ஆகவேதான் சொல்லுகிறார்; ஆளுகிறவர்களுக்குத் தேவையான லட்சணம் என்ன என்று கூறுகிற போது,

"தூங்காமை கல்வி துணி
வுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு"

—தூங்காமல் இருக்க வேண்டுமாம்; கல்வி வேண்டுமாம்; 'எங்களுக்குக் கொடுக்க வேண்டிய பங்கைக் கொடு' என்று கேட்கிற துணிவுடைமையும் வேண்டுமாம்-என்று மிக மிக அழகாக வள்ளுவர் சொல்லுகிறார்; இவை எல்லாம் நீங்காத பண்புகளாக இருக்க வேண்டும் நிலத்தை ஆள்பவருக்கு!

இந்த இரண்டு 'பால்'களிலும்அரசியல் கருத்துகளை அழகாகப் பிட்டுப் பிட்டு எடுத்துச் சொன்ன வள்ளுவர்— மூன்றாவதாக ஒரு பால், முன்னால் அமைச்சராக இருந்த அவினாசிலிங்கனாருக்குப் பிடிக்காத பால்—அந்தக் காமத்துப் பாலைப் பற்றி எழுதுகிற நேரத்தில்—எவ்வளவு அழகாக—இங்கிருக்கும் பெரியவர்கள் எல்லாம் அலுத்துச் சலித்து விட்டாலும் அந்தச் செய்திகள் இப்போதும் ருசிக்கும் படியாக—மாணவர்கள் எல்லாம் கனவு காணும் விதத்திலே—அதைச் சொல்லுகிற நானும், கேட்கின்ற நீங்களும் தனிச்சுவையைக் காணுகின்ற விதத்திலே— இல்லறத்தின் மகிமையை, இல்லறத்திலே இருக்க வேண்டிய காதலை மிக மிக அழகாகச் சொல்லுகிறார்.

யார் யாரோ என்னென்னவோ சொன்னார்கள் காதலைப் பற்றி; பக்கம் பக்கமாக எழுதினார்கள்; மேல்நாட்டுப் புலவர்கள் எல்லாம்-இலக்கிய கர்த்தாக்கள் எல்லாம்—நூறு பக்கம், இருநூறு பக்கம் எழுதித் தீர்த்தால் கூட, காதலைப் பற்றி பரிபூர்ணமாக எழுதி முடித்து விட்டோம் என்று அவர்கள் திருப்தி அடையவில்லை; ஆனால் வள்ளுவர் அப்படி அல்ல! அந்த ஒரே அதிகாரத்தில் — இன்னும் சொல்லப் போனால், ஒரே குறளிலேகூட 'காதலென்றால் என்ன?' என்று விளக்கி விடுகிறார்:

"உள்ளக் களித்தலும் காண
மகிழ்தலும்
'கள்ளுக்கு இல் காமத்திற்கு
உண்டு.',

—உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் 'கள்'ளுக்கு இல்லை! நல்ல குடிகாரனிடத்திலே போய், கள்ளுப் புட்டியை எதிரே வைத்து, எட்டி நின்று பார்க்கச் சொன்னால், அவன் அந்தப் பார்த்து மகிழ்ச்சி அடைய மாட்டான்; அதைப் போல 'கள்' என்று அவனிடம் சொன்னாலும், மனதால் நினைத்து மகிழ்ச்சி அடைய மாட்டான். ஆனால் காதல் அப்படி அல்ல; அதை நினைத்தாலே மகிழ்ச்சியாம்! இரண்டாயிரம் 'மைல்களுக்கு அப்பால் இருக்கும் காதலியின் அழகான திருமுகத்தை எண்ணி—அவள் எழுதிய அந்த அழகான மடலைப் பார்த்து—கையெழுத்திலே அவளது நீலக்குறு நயனங்களையும்-எப்படித்தான் எழுதினாளோ என்று எண்ணுகிற நேரத்தில் அவளது காந்தள் விரல்களையும்—பேனா பிடிக்கக்கூடிய நேரத்திலே அவள் கையிலே இருந்தது மயில் தோகையோ; அல்லது புறாவின் இறகோ என்றும் எண்ணி—அத்தகைய களிப்பையும் உள்ளம் பெறுகிறதாம்—உள்ளக் களிக்கிறதாம்!

அவளைப் பூங்காவில் காணுகிற நேரத்தில் அது மாடப்புறாவோ — மனமோகன மயிலோ, குயிலோ என்றெல்லாம் எண்ணி—கண்டு மகிழ்தலும் காமத்திற்கு மட்டுமே தான் உண்டு; கள்ளுக்கு இல்லை! மாணவர்கள் பலருக்கு அது புரியாது; சுவைத்தவர்களுக்கும்ரசித்தவர்களுக்கும்மட்டுமே புரியும்! அந்த அளவுக்கு வள்ளுவர் — அவரது வயது என்னவோ, அறுபது வயதிலே கூட எழுதியிருக்கலாம்; ஆனாலும் இளம் உள்ளத்தோடு எழுதியிருக்கிறார்; அந்த இன்ப நெஞ்சத்தோடு எழுதியிருக்கிறார்! இதைப் படிப்பவர்கள் எதிர்கால இளைஞர்கள்; தமிழகத்துத் தவப் புதல்வர்கள்; அவர்களுக்குத் தேவையானது காதல், வீரம், நாட்டுப் பற்று, அரசியல் முறை, குடும்பம் நடத்துகின்ற தன்மை, பண்பு

# புதையல் காப்போம்; அதன் வழி நிற்போம்!

பழக்கம்—இத்தனையும் தேவை என்று கருதி அவர் எழுது கிறார்.

இன்னுமொன்று அழகாகச் சொல்லுகிறார். அவர் எழுது கிற கருத்தினைவிட அவர் எடுத்தாண்டிருக்கிற உவமை இருக்கிறதே உதாரணம் இருக் கிறதே; அந்த உதாரணத்தை—தமிழகத்தின் சார்பிலே அறை கூவலிட்டச் சொல்ல முடியும்; எந்த மேல்நாட்டுப் புலவனும் இதுவரைக் கையாண்டதில்லை! கணவன் வெளியூர் சென்றிருக் கிறான்; தையலுக்கு அவன் மேல் ஆத்திரம்; 'வரட்டும்; வரட்டும்; பார்த்துக் கொள்ளு கிறேன்! எவ்வளவு காலம் பிரிந்திருக்கிறான் அவன்! வந்ததும் எப்படி எப்படி கண் டிருக்கிறேன் பார்' என்று அடுத்த வீட்டுத் தோழியிடம் —பக்கத்து வீட்டுப் பாங்கி யிடம்—எதிர் வீட்டு ஏந்திழை யிடம் சொல்லிக் கொண்டிருக் கிறாள். 'என்ன பாடு படுத்து கிறேன் பார்! வாசலில் ஒரு மணி நேரமாவது நிற்க வேண் டாமா?—காமி! சத்திய பாமா! கதவைத் திறவாய்! என்று பாட வேண்டாமா? பாடினு லும் கதவைத் திறப்பேனு? கதவு திறந்தாலும் இரண்டு மணி நேரம் கண்ணைத் திறப் பேனு?' என்றெல்லாம் சவால் தொடுத்துக் கொண் டிருக்கிற மனைவி கணவனை எதிரே பார்த்ததும் என்ன ஆகிறாள் என்பதை ஒரு நல்ல உதாரணத்தின் மூலம் வள்ளு வர் விளக்குகிறார், தூர இருந்த கணவன் அருகில் வந்ததும், அவனது 'தற்றங்களை எல்லாம் மறந்து விடுவாளாம்! எப்படித் தெரியுமா? 'எழுதுங்கால் 'கோல்காணுக் கண்ணேபோல்' —மையெழுதிக்கொள்வார்களே பெண்கள், அப்போது மைச் சிமிழை எடுத்து, அழகான மைக்கோல் ஒன்றையும் எடு த்து, அந்தச் சிமிழிலே தோய் க்கிருள், பார்ப்பவர்களுக்கு அப்போது தூர இருக்கிற அந்த எழுதுகோல் கண்களுக் குத் தெரியும், அதாவது கண வன் தூர இருக்கும்போது அவனது குறைகள் மாத்திரம் தெரிவதுபோல! அதை எழுது வதற்குக் கண் அருகிலே கொண்டு போகும்போதோ... கண்களுக்குத் தெரியாது அது போலவே, கணவன் அருகிலே வந்ததும், அவனது பிழை களும் தெரியாமல் மறைந்து விடுகின்றன:

" எழுதுங்கால் கோல்காணுக்
கண்ணேபோல் கொண்கன்
பழி காணேன் கண்டவிடத்து"

எத்தகைய அருமையான உதா ரணம்! அதுமாத்திரமல்ல; அந்தக் காதல் இலக்கணத்தில் அந்தப் புலவனும் கையாளாத முறையைக் கையாளுகிறார்.

இப்படி தமிழகத்திலுடைய இல்வாழ்க்கையையும், சமுதாய வாழ்க்கையையும் சிருட்டித்துக் காட்டியவள்ளுவர் பெருந்தகை யாளருடைய குறள் நாட்டு மக்களின் உள்ளத்திலே நல்ல முறையில் ஒலிக்க வேண்டு மானல், அந்த ஓவியம் அவர்க ளது உள்ளங்களில் நல்லமுறை யில் பதிய வேண்டுமானல், அந்தக் குறளோவியத்தை மாணவர்கள்—பெரியோர்கள் —தாய்மார்கள்—இந்த நாடு வாழ வேண்டுமென்று விரும்பு கின்ற அத்தனை பேரும்—'நாடு வாழ நலிவு போக' விரும்புகிற வர்கள் அக்குறளை ஒரு நல்ல வேதப் புத்தகமாகக் கருதி—குறளோவியத்தின் வழிநடந்து. அந்த வழியிலே நமக்குக் கிடைக்கின்ற நலன்களை அனுப வித்து—சுகங்களை அனுப வித்து, "திருக்குறள் ஒரு இன் பச் சோலை; அதை இதுவரை பாலை என்று எண்ணிக் கிடந் தோம்! சோலைக்குச் செல்லு வோம்; அதிலே கருத்துக் கானமயில் ஆடும்; கொள்கைக் குயில் கூவும்; நல்ல விளக்கங் கள் என்ற புள்ளிமான்கள் துள்ளும்; அத்தகைய சோலை யிலே ஆனந்தத் தென்றல் வீசும்! அத் தகைய அரசியல் தென்றலாக—இலக்கியப் பெட்டகமாக—இன்பப் புதையலாக—இல் லறக் கருவூலமாக இடைத் திருக்கிற ஓவியம்தான் குற ளோவியம்! அதன் வழி நடந்து நாடு வளர்ப்போம்! நலன் குவிப்போம்!

❀
❀

தலைமைக் கழக அறிக்கை

## சென்னை மாவட்டக் கழக உறுப்பினர்களுக்கு :

தி. மு. கழகப் பொதுக்குழுவால் முடிவெடுக்கப் பட்டு, கழகத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டவர்களின் காரண மாகக் காலியாகியுள்ள மாவட்டச் செயலாளர் பொறுப் புக்கும், இரண்டு பொதுக்குழு உறுப்பினர் பொறுப்புகளுக் கும், தோழர் சி. டி. டி. அரசு அவர்களின் விலகுதலின் காரணமாகக் காலியாக உள்ள பொதுக்குழு உறுப்பினர் பொறுப்புக்கும் புதிய பொறுப்பாளர்களைத் தேர்ந்தெடுப்ப தற்குரிய நாளாக 12—5—57-ஆம் நாள் இதன்மூலம் உறுதி செய்யப்படுகிறது:

தேர்தல் 12—5—57 அன்று காலை 10-மணிக்கு சென்னை 'அறிவக'த்தில் நடைபெறும்.

30—4—57-க்குள் தலைமைக் கழகத்திடம் பதிவான முறைப்படியாக உள்ள பிரதிநிதிகள் மட்டுமே தேர்தலில் அனுமதிக்கப்படுவார்கள்.

தேர்தல் நடத்திவைக்கும் ஆணையாளரின் பெயர் பின் னல் அறிவிக்கப்படும்.

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச் செயலாளர், தி. மு. க.

## மு. கருணாநிதி
சுற்றுப்பிரயாண நிகழ்ச்சிகள்

மே

5: திருவல்லிக்கேணி
6: அமைந்தகரை
11: குளித்தலை
12: திருச்சி—காலை—சிறப்புக் கூட்டம்
மாலை—உறையூர்
19, 20: ஏற்காடு தொகுதி (சேலம் மாவட்டம்)
24: மேட்டுப் பாளையம் (திருச்சி மாவட்டம்)
25: எடமேலையூர்
28: மன்னார்குடி

## பொதுச்செயலாளர் தந்த மே தினச் செய்தி.

"மேதினி யெங்கும் கொண் டாடப்படும் இந்த மேதின விழா தொழிலாளர்கள் இது வரை பெற்ற உரிமைகளை நினைத்துப் பெருமைப்படவும் பெற வேண்டியனவற்றிற்காக போராடத் தயாராவதற்கும் பயன்பட்டு வரும் ஒரு பெரு விழாவாகும்.

இந்த மே விழாவில் மிகப் பெரும்பாலும் பாட் டாளிகளையே உறுப்பினர்க ளாகக் கொண்ட திராவிட முன்னேற்றக் கழகத்தவர் கலந்து கொள்வது சாலப் பொருத்த முடையதாகும். நமது கழகத்தில் பட்டக்காரர் களோ, ஜமீன்தார்களோ, நிலப் பிரபுக்களோ, மிராசுதார் களோ இருக்கவில்லை. அப்ப டிப்பட்ட கழகத்தவர் கலந்து கொள்ளும் இந்த மே விழா தான் வேறு பலரால் கொண் டாடப்படும் மே விழாக்களை விடச் சிறப்பானதாகும்.

சக்திக்கேற்ற உழைப்பு—தேவைக்கேற்ற வசதி—என் பதே நமது இலட்சியம்! 'உழைப்பவருக்கே உலகம்' என் பது நமது கொள்கை! இந்த இலட்சியக் கொள்கை வெற்றி பெறும் வரையில், இடையில் தோன்றக் கூடிய எல்லாச் சிக் கல்களையும் எதிர்த்து நாம் போரிட வேண்டும்—போரிடு வோம் என்று உறுதி பூண வேண்டும்.

தொழிற் சங்கங்களைப் பொ றுத்தவரையில் நமது கருத்தை நாம் ஏற்கெனவே தெளிவாக்கி யிருக்கிறோம்.

தொழிற் சங்கங்கள் அரசி யல் கட்சிகள் என்ற கொழு கொம்பினைச் சுற்றிப் படரும் கொடிகளாக இருக்க வேண் டுமே தவிர, அரசியல் கட்சிகள், தொழிற் சங்கங்கள் என்ற கொழுகொம்பைச் சுற்றிப் பட ரும் கொடிகளாக இருக்கக் கூடாது.

'ஆனல், இப்போது பல அர சியல் கட்சியினர் தொழிற் சங் கங்களைத் தங்கள் கட்சிகளின் வளர்ச்சிக்கே பயன்படுத்தி வருகின்றனர்.

தொழிற் சங்கங்கள், அரசி யல் கட்சிகளின் பெயரால் வர் ணம் கொடுத்து பிரிந்துவிட் டால்—ஒவ்வொரு கட்சிக்கும் ஒரு தொழிற் சங்கம் என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டால் பிற அரசியல் கட்சியினர் ஏற் படுத்தும் அந்த நிலை எங்களை யும் எங்கள் கழகத்தோழர்கள் கொண்ட தொழிற்சங்கம் அமைக்கும் நிலைக்குத் தூரத்து கின்றது. அது தவிர, எந்தக் கட்சிச் சார்புமின்றி தொழிற் சங்கங்கள் பொதுத்தன்மை யுடன் இயங்குமானல், நாங் கள் அதனை உடைக்கும் நோக் கத்துடன் புதிய தொழிற்சங் கங்கள் துவங்கமாட்டோம்.

ஏனைய அரசியல் கட்சியினர் தங்கள் தங்கள் கட்சிக்காகத் தொழிற் சங்கங்களைப் பயன் படுத்தாமல் 'பொது நோக் குடன் நடந்துகொள்ள வேண் டும் என்பதையே நான் தி. மு. கழகத்தின் மே தினச் செய்தி யாக அறிவிக்கிறேன்.' ❀



# நாலேனி

### தேன் மொழியாள்

எழுதியவர் : பகீரதன்

நல்ல தமிழுணர்வும்; தமிழறிவும் கொண்ட நல்ல தமிழர் தோழர் பகீரதன் அவர்கள் முன்னர் "கல்கி" ஏட்டில் எழுதி பல்லா யிரம் மக்கள் படித்து மகிழ்ந்த பெருங் கதைதான் பேரழகு கொண்ட நூல் வடிவு பெற்றிருக்கிறது.

இப்போதெல்லாம் எத்தனையோ நூல்கள் வெளிவருகின்றன; ஆபாசத்தை அழகுத் தட்டில் ஊற்றி பாயாசம் என்று பருகச் சொல் வோர்; எழுத்தை வியாபாரமாக்கி நிர்வாணக் கதைகளை நிறைந்த வர்ணனைகளுடன் வாரி வழங்குவோர்—இப்படிப் பல ரகம்!

இந்த வியாபார யுகத்திலேதான்; எழுத்துத் தரகர்கள் இழிதகை கருத்துக்களை இலக்கியச் சந்தைக்கு உயர்ந்த 'லேபிள்'களுடன் அனுப்பி வைக்கும் இந்தக் காலத்திலேதான்; நல்ல இலட்சியத்தை—நாட்டு நலிவு போக்கும் உயர்ந்த எண்ணத்தை மையமாகக் கொண்டு புனையப்பட்ட 'தேன் மொழியாள்'ன் நுழைவு திகட்டாத விருந்தாக இனிக்கிறது!

பொதுவாக பெருங்கதையின் வெற்றிக்குக் கருப்பொருள்கள் கதை 'அமைப்பும்; சம்பவங்களின் வேகத்தைக் குறைக்காத விறு விறுப்பான அழகு நடையும்தான்! இவை இரண்டோடும்; கவினுறு பாத்திர அமைப்போடும் கதையைப் படைத்திருக்கிறார், பகீரதன்!

பேசும் தமிழினை வீசும் வசந்தமென வாரி வழங்கி யிருக்கிறது அவரது பேனா! பலர் பேசுவதற்குக் கூசும் சமூக சீர்திருத்தக் கருத்துக் களின் வாசம் பக்கத்திற்குப் பக்கம் கமழ்கிறது!

"இந்தச் சாதி இருக்கிறது பாருங்கள், அது பொல்லாதது! அதன் வெறியில் நல்லவர்களும் தீயவர்கள் ஆகி விடுவார்கள். 'உயர்ந்த சாதி' 'உயர்ந்த சாதி' என்ற எண்ணம் அவர்கள் இரத்தத்திலே ஊறிப் போயிருக்கும். அதைத் தாங்கள் நினைப்பதுபோல் அவ் வளவு சுலபமாக மாற்ற முடியாது."

—இதுபோல் வேம்பென்று சிலர் கருதும் கருத்துக்களை கற் கண்டு நிகர் கதையுடன் குழைத்துத் தருகிறார், ஆசிரியர்!

கதை; கருத்து; நடை—இவை நிறைந்த இந்த ஏடு உங்கள்—இல்லத்து நூலகத்தில் நிச்சயம் இடம்பெற வேண்டும்.

(விலை ரூபாய் மூன்றரை)

### முல்லைவனத்து மோகினி

எழுதியவர் : பகீரதன்

தோழர் பகீரதன் இத்தப் புத்தகத்தில் கதை அமைப்பைவிட மனித உணர்ச்சிகளைச் சித்தரிப்பதற்கே அதிக முக்கியத்துவம் கொடுத் திருக்கிறார். பாவையொருத்தியைக் காதலிப்பதாகப் பாகுமொழி பேசி, பின்னர் அவளைக் கைவிட்டு; அவள் சித்த பேதம் கொண்டு சுற்றியலை யக் காரணமாயிருந்த ஆண் மகனின் கதை இது!

தாய்க் குலத்தின் பெருமையையும், ஆண் குலத்தின் அக்கிரமப் போக்கினையும் செவ்வனே சித்தரித்திருக்கிறார்.

'தமிழன்னைக்கு அணிகள் பூட்டி அழகு செய்து பார்க்க இத்த கைய அருந்தமிழ் ஏடுகள் எக்காலத்தும் தேவை' என்கிறார் இந் நூலுக்கு மதிப்புரை வழங்கியிருக்கும் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை.

சுவைபட உணர்ச்சிகளை ஓவியமாக்கிக் காட்டும் நூல்களுள் ஒன் ருகத் திகழக்கூடியது இந்தப் புத்தகம்.

(விலை ரூபாய் ஒன்றரை)

### உழைப்பால் உயர்ந்த ஏழை

எழுதியவர் : பகீரதன்

உழைக்காமல்; நெற்றி வியர்வையை நிலத்தில் இறைக்காமல்; ஊரார் சொத்தை உறிஞ்சி, மனிதருள் பதர்களாய் வாழ்ந்துவரும் பண்பு கெட்டவர்களைச் சாடும் பாண்மையிலே; தொண்டின் மேன்மை யையும்; பண்பின் பெருமையையும் மலை உச்சி ஏற்றி வைத்த தீபச் சுடராகப் பரப்பிடும் நோக்கத்திலே இந்தக் கற்பனைக் கதையைத் தீட்டி யிருக்கிறார், தோழர் பகீரதன்!

முக்கிய கதாபாத்திரங்கள் நடமாடும் தமிழ்த் திருவுருவங்கள்: நாம் வாழ்க்கையில் அன்றாடம் சந்திப்பவர்கள்! சம்பவங்கள் பல நமது சொந்த அனுபவங்கள்!—இவற்றைவிட ஒரு பெருங்கதையின் வெற்றிக்கு வேறென்ன வேண்டும்? இவை மலிந்திருக்கின்றன இந்த ஏட்டில்!

மொத்தத்தில் இந்த 'உழைப்பால் உயர்ந்த ஏழை' கதை அமைப் பில்; கருத்துச் செறிவில்; கற்பனை வளத்தில் சீமானாக; கோமானாக விளங்குகிறான்!

இருந்தாலும், ஏழைகளும் இதை வாங்கிப் படிக்கும் அளவுக்கு விலையை குறைத்திருக்கலாம்.

(விலை ரூபாய் இரண்டே கால்)

மேற்கண்ட புத்தகங்கள் கிடைக்குமிடம் :

**கலைஞன் பதிப்பகம், தி. நகர், சென்னை-17.**

# கடைசிப் பக்கம்

## எழுத்தாணி

சாமியப்பன்; கோடு முடி

(?) உதய சூரியன் ஒரு வேளை மறைந்துதானே தீரும்?

ஆனால் மறு நாள் உதித்தே தீரும்!

கல்யாணராமன்; பொன்மலை

(?) எதிர்க்கட்சிக்காரர்களின் கடமை என்ன?

இலக்கணப் புலவர்களைப் போல; ஆளும் கட்சியினர் கக்கும் கவிதைகளிலுள்ள விவகாரங்களைச் சுட்டிக் காட்டி; நிவர்த்தி காண எத்தனிப்பது தான் உண்மை ஜனநாயகத்தில் எதிர்க் கட்சிக்காரர்களின் கடமை!

இரா. கிருட்டிணமூர்த்தி; சிங்கா நல்லூர்.

(?) விடுதலைப் போராட்டத்தின் தலைவர்கள் யார்?

அடிமை நாட்டிலே காவற் கைதிகளாகவும்; அடிமை விலங்கொடித்த பிறகு ஆட்சி பீடமேறிகளாகவும் மாறக்கூடிய மாவீரர்கள்!

சி. அருணகிரிநாதன்; உறையூர்

(?) கலைத் துறைக்கும் தனக்கும் தி. மு. கழகம் ஏன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறது?

மொழி; இலக்கியம்; கலை; கலாச்சாரம்—இவைதான் ஒருதேசிய இனத்தைப் பிரிதொரு தேசிய இனத்திலிருந்து பிரித்துக்காட்டுகின்ற இலக்கணங்கள்! எனவே தி. மு. கழகம் உலகத்தின் ஏனையதேசிய விடுதலை இயக்கங்கள் தொடர்பு கொண்டிருப்பதைப் போலவே கலைத்துறையோடு தொடர்பு கொண்டிருக்கிறது.

கா. வி. சோமநாதன்; காரைக்குடி.

(?) சென்னை கேரளமாக மாறுமா?

மாறும்; இன்னும் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு! இப்போது கேரளத்தில் கம்யூனிஸ்ட்டுகள் பெற்றிருக்கும் இடம் அப்போது தமிழகத்தின் உண்மையான பொதுவுடைமைக் கட்சியாம் தி. மு. கழகத்திற்கு வரத்தான் போகிறது!

இளமாறன்; தூத்துக்குடி.

(?) ஏவிளம்பி—என்று துவங்கியிருக்கிறதே: இதுபோன்ற ஆண்டுகளின் பெயர்களைத் தமிழ் என்று கூற முடியுமா?

இல்லை; கி. பி. 436-ல் தான் ஒரு ஆரிய அரசன் அந்த அறுபதாண்டுப் பெயர்களையும் உருவாக்கினான். அதற்கு முன்பு, அந்தந்த நாட்டு அரசர்கள் பெயரால், இந்த அரசனுடைய ஆட்சியில் இத்தனையாவது ஆண்டு என்று தான் குறிப்பிட்டு வந்தார்கள்!

கோமேதகவேலு; திருநெல்வேலி.

(?) திராவிடநாடு பிரிந்தால் வட நாட்டில் என்ன ஏற்படும்?

பஞ்சம் ஏற்படும்-மூளைப் பஞ்சம்!

எல். எஸ். சங்கரநாராயணன், திருக்குடந்தை

(?) தேர்தல் என்பது என்ன?

காமராசர் போன்ற பண்பற்றவர்கள் பணமற்ற வாக்காளர்களிடம் பேரம் பேசி நடத்துகின்ற வியாபாரம்தான் அது! இந்தத் தன்மை பெற வேண்டுமானால் காமராசர்கள் ஜனநாயகப் பண்பு பெற வேண்டும்; அல்லது பொதுமக்களின் அறிவுத் திறம் வளருவதற்கு முன்பு அவர்கள் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும்!

கேசவன்; போடிநாயக்கனூர்

(?) உலகச் சரித்திரத்தின் துவக்கம் என்ன? முடிவு என்ன?

பூமி நெருப்புக் கோளமாக இருந்த நிலை மாறி, அதில் மனிதன் தோன்ற ஆரம்பித்ததிலிருந்து உலகச் சரித்திரத்தின் முதல் பக்கம் துவங்குகிறது. அநேகமாக மூன்றாவது உலக யுத்தமொன்று வந்தால் உலகச் சரித்திரத்தின் கடைசி அத்தியாயமும் எழுதப்பட்டு விடும்!

---



---


ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர்:

மு. கருணாநிதி

'முரசொலி' அச்சகம்,

4-128, வெஸ்ட் ரோடு,

சென்னை—6. தமிழ்நாடு.

